

$6\frac{1}{2}$ கோடி ஜெர்மானியரும் உலகினா பலரும் கேட்க ஒலி பரப்புங் கருவியில் (Radio) ஹிட்லர் தாம் பேசக் கருதும் விஷயத்தைப்பற்றி நன்கு ஆலோசிப்பதை அவர் முகம் காட்டுகிறது.

[Orbis-Photo]

# ஆடொல்ப் ஹிட்லர்

அல்லது

## திறமையின் வெற்றி

இயற்றியவர்

ஹ. பைதான் சாஸ்திரியார் அவர்கள்

By

**Dr. H. Beythan**



தேசீய வித்தியா சங்கம்

சென்னை

1936

## ஆக்கியோர் முகவுரை

'எண்ணித் துணிக கருமம்,' என்பது திருவள்ளுவர் ஆராய்ந்து கூறிய அனுபவ மொழியாகும். ஆதலின், ஒரு காரியத்தைத் தீர ஆலோசியாமல் அதைப்பற்றி முடிவு கட்டுதல் கூடாது. ஜெர்மனியில் சிறிது காலத்திற்கு முன் பல வித மாறுதல்கள் ஏற்பட்ட பொழுது, உலகமெங்கும் பொய்யும் வழுவுமுள்ள பற்பல வதந்திகள் பரப்பப்பட்டன. இந்தியாவிலும், இதாகிதம் தெரியாத கபடற்ற மாந்தர் பலர் இவ்வாறே உண்மை நெறியிலிருந்து தவறுமாறு செய்யப்பட்டனர். தமிழ் மக்கள் சத்தியத்தின் மேன்மையை நன்கு உணர்ந்தவர்கள். ஆகவே, அவர்கள் ஹிட்லரைப்பற்றிப் பிறர் கூறுவனவற்றை நம்புவதற்குமுன் தீர ஆலோசித்து உண்மையை உணர்தல் வேண்டும் என்பது கருதியே இச்சிறு நூல் எழுதி வெளியிடப்பட்டது. 'சத்தியமே வெல்லும்; அசத்தியமே கொல்லும்.'

இந்நூல் தமிழ் நாட்டினர்க்குப் பயன்படுமாறு சிறந்த முறையில் அச்சிட்டு வெளிப்படுத்திய சென்னைத் தேசீய வித்தியா சங்கத்திற்கும், அச்சாகும்போது இதற்கு ஆவன பலவும் செய்த வித்துவான் மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை அவர்களுக்கும், கனம் G. ஸ்டாலின் சாஸ்திரியார் Ph. D., அவர்களுக்கும் என் நன்றியறிதலைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

*Berlin—Treptow,*
*April 30, 1936*

ஹ. பைதான்
(H. Beythan)

# அட்டவணை



'இன்' என்னும் ஆற்று மலை காட்டுக் காட்சி.

# ஆடொல்ப் ஹிட்லர்

அல்லது

# திறமையின் வெற்றி

"ஆக்கம் அதர்வினுய்ச் செல்லும் அசைவிலா
ஊக்கம் உடையான் உழை."—திருக்குறள், 594.

## 1. இளமைப் பருவம்

**ப**னிக்கட்டியால் மூடப்பட்டு உயர்ந்த மேருவைப் போன்ற சிகரங்களையுடைய **ஆல்ப்ஸ்** என்னும் மலைத்தொடரின் கண-வாயில் **இன்** என்னும் ஓர் ஆறு வேகமாய்ப் பாய்கிறது. அதன் ஓரத்தில் பண்டைக் காலம் தொட்டு, கர்மானியர்கள் வசித்து வருகிறார்கள். அவர்களில் **ஹிட்லர்** என்னும் பெயர் கொண்ட ஒரு குடும்பத்தார் உண்டு. அவர்கள் விவசாயத்தையும் கைத்-தொழிலையும் செய்தொழிலாக உடையவர்-

கள். ஹிட்லர் குடும்பத்தில் பிறந்த ஒரு புத்திரர் அக்குடும்பத்திற்குரிய வீடு நிலங்களைத் தம் தமையனுருக்கு விட வேண்டி, அரசாங்க உத்தியோகத்தைத் தேடினர். அவருக்குப் பிரௌனுவ்* என்னும் சிறு நகரில் 1889-ஆம் ஆண்டு ஓர் ஆண் பிள்ளை பிறந்தது. அந்தப் பிள்ளைக்கு ஞான ஸ்நானத்தில் ஆடொல்ப்† என்னும் பெயர் இடப்பட்டது. அந்தப் பிள்ளையி-னுலே தந்தையார்க்கு உண்டான கீர்த்தி சிறியதன்று.

"மகன்தந்தைக்கு ஆற்றும் உதவி, 'இவன்தந்தை என்னோற்ருன் கொல்!'எனுஞ் சொல்."

—திருக்குறள், 70.

அந்தக் குடும்பம் குடியிருந்த இடம் இரண்டாயிர வருஷ காலமாகக் கர்மானியா இராச்சியத்தின் ஒரு பாகமாயிருந்தது. சிறிது காலத்துக்கு முன், 1866-ஆம்

*Braunau †Adolph

ஆண்டில், இவ்விராச்சியம் இரண்டு பங்காகப் பிரிந்து போன போது ஹிட்லர் குடும்பம் குடியிருந்த இடம் ஆஸ்திரியாவின் ஒரு பாகமாக நியமிக்கப்பட்டது. என்ருலும், அதன் மக்கள் முன்னிருந்த கர்மானியர்களே. ஆகவே, ஹிட்லர் பிறப்பினுல் கர்மானியர் அல்லர் என்பது பெருந்தவறு.

ஆடொல்ப் வளர வளரத் தம்மோடொத்த மற்றப் பிள்ளைகளோடு விளையாடிப் பள்ளிக்கூடத்துக்குப் போய் ஒழுங்காகப் படித்து வந்ததுமன்றித் தம்மால் கூடியமட்டும் தாய் தகப்பன்மார்களுக்கு அவர்கள் வேலையில் உதவியும் செய்து வந்தார். இவர் பதினுன்கு வயதினர் ஆன போது தந்தையார் இறந்து போனுர். அப்போது ஆடொல்ப் தாயாருக்குத் தனி ஆதரவாயிருந்தார். சில வருஷங்களுக்குப் பிறகு தாயாரும் இவ்வுலகை விட்டு நீங்கினுர்.

"ஈன்ற பொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனைச்
சான்றோன் எனக்கேட்ட தாய்."

—திருக்குறள், 69.

என்றபடி தம் மைந்தரைச் சான்றோர் புகழுவதைக் கேட்கத் தாயாருக்குச் சீவன் கொடுக்கப்படவில்லை. என்ன பரிதாபம்! என்ன செய்வார் இத்திக்கற்ற சிறுவர்? பிச்சை எடுக்கப் போவாரா? போகமாட்டார். 'எத்துயரம் வந்தாலும், அதை வெல்ல வேண்டும்,' என்று இவர் உறுதி கொண்டார்.

இவர் கைத்தொழிலைக் கற்று வாழும்பொருட்டு **வியன்னு***[*] எனும் பெரிய நகரத்துக்குச் சென்றார். அங்கு இவருக்கு அறிமுகமானவர் ஒருவருமில்லை. இவர் படங்கள் எழுதுவதில் கெட்டிக்காரர்; தாம் ஒரு பெரிய சித்திரக்காரனாக வேண்டும் என்று ஆசைப்பட்டும், முதலில் அதில்

*Vienna

தவறினர். இவருக்குச் சிற்ப சாஸ்திரம் கற்பிக்க ஆசிரியர்கள் ஆலோசனை செய்தார்கள். ஆயினும், அதைக் கற்றுக்கொள்ள இவருக்குப் பொருளும் ஆதரவும் இல்லை. ஆதலால், இவர் கொல்லத்து வேலை கற்றுக்கொள்ளத் தொடங்கினர்; இவ்வேலைக்குத் தக்க பழைய வஸ்திரங்களை உடுத்திக்கொண்டு வீடு கட்டுகிற இடத்துக்குப் போனர்; கூலியாளாகச் செங்கல் சுமந்து, ஏணி ஏறிக் கற்களைக் கொத்தனுக்குக் கொடுத்தார்; சுண்ணாம்பும் மணலும் கலந்து தோள்மேல் சுமந்து சென்றார்; எவ்வளவோ கஷ்டப்பட்டார். வேலை முடிந்த பிற்பாடு இவருக்குச் சாயங்காலத்திலுங்கூட ஓய்வு இல்லை. மற்ற வாலிபர் ஆடிப்பாடிக் காலங் கழிக்கையில், இவர் தனியே தம் சிறு அறையில் அமர்ந்து, புஸ்தகங்களை வாசித்து, அரசியல் விஷயங்களைக் கூர்ந்து ஆராய்ந்து, கற்று வந்தார்.

இவரோடு வேலை செய்து வந்த கூட்டாளிகள் நல்லவர்கள் அல்ல. அவர்கள் இயற்கையிலே நல்லவர்களாயிருந்தாலும் இருக்கலாம். ஆயினும், அவர்கள் புத்தியும் மனமும் பொல்லாதவர்களின் சேர்க்கையால் சீர்கெட்டுப் போயிருந்தன. ஹிட்லர் அவர்களோடு சேர்ந்து மது பானம் பண்ணவோ, தம் சொந்த அரசரையும் அவருடைய ஆட்சியையும் நிந்திக்கவோ மாட்டார். ஆகையால், இவரை அக்கூட்டாளிகள் பகைத்து எதிர்க்கத் தொடங்கினார்கள். அவர்கள், "இவன் எங்களோடு வேலை செய்யக் கூடாது. இவனைத் தள்ளிவிட வேண்டும்," என்று தங்கள் மேஸ்திரியினிடம் கூறினார்கள். மேஸ்திரிக்கோ, இப்படிப்பட்ட நல்ல வேலைக்காரரைத் தள்ளிவிட மனமே இல்லை. பகை நாளுக்கு நாள் அதிகமாயிற்று. சிலர் இரகசியமாகக் கூடிப் பேசி, இவரைக் காணும்போது நகைத்தனர்; "ஆகட்டும்! அந்தக்

காமாட்டிப் பயல் நாளைக்கு ஏணி ஏறும்போது ஏதாவது கல் பாரம் கீழே விழுந்து ........" என்று குசுகுசுவென்று பேசிக்கொண்டனர். அன்று சாயங்காலம் வேலை முடிந்து வேலைக்காரர் நான்கு ஐந்து பேராகக் கூடி வீட்டுக்குச் செல்லும்போது ஹிட்லர் வழக்கம்போலத் தன்னந்தனியே போகவே, வேலையாட்களில் ஒரு கிழவன் இவரோடு சேர்ந்து பேசிக்கொண்டு போனான். கிழவன் பிரிந்து போகும்போது இவ்வாலிபரைப் பார்த்து, "அப்பா, தம்பீ, நீ நாளைக்கு இந்த வேலைக்கு வராதே. வந்தால், நீ உயிரோடு வீட்டுக்குத் திரும்பிப் போகமாட்டாய். நீ நாளைக்கு ஏணி ஏறும்போது எப்படியாகிலும் ஒரு பெரிய கல் தற்செயலாக விழுவது போலக் கீழே விழுந்து........உன் தலைக்கு அப்போது என்ன நேரிடும்?" என்று சொல்லிப் பிரிந்தான். என்ன செய்வார் ஏழைச் சிறுவர்! தம்மிடமிருந்த சொற்பப் பணத்-

தைக் கொண்டு இரயில் ஏறி, மூனிக்கு என்னும் பட்டினம் சேர்ந்தார்; அங்குத் தம் சீவனத்துக்கு வேண்டும் பொருளைச் சம்பாதிக்கச் சித்திரப்படங்கள் எழுதுங் கலையில் தேர்ச்சியடைய முயன்றார்.

*Munich.

## 2. போர் வீரர்

இப்படியிருக்கையில் 1914-ஆம் வருஷம் திடீரென்று பெரிய யுத்த முழக்கம் ஏற்பட்டது. பெரும்போர் ஆரம்பமாயிற்று. அப்போது ஹிட்லர், தாம் இராணுவச் சேவகர்களில் ஒருவராக இல்லாதிருந்தும், தாமும் தேசத்தைக் காப்பாற்றுவதற்கு முன் வந்தார்; உடனே ஒரு சேனையிற் சேர்ந்து பயிற்சி பெற்று, யுத்தத்திற்குப் புறப்பட்டார். யுத்தத்திலே இவர் தம் உயிரை ஒரு பொருளாக எண்ணுமல், பெரிய வீரராய்ப் போராடினூர்; அபாயமுள்ள சமயங்களில் தாமே முன் நின்றூர். இவர் தம் தோழரை இரட்சிக்கும் விஷயத்தில் தம் உயிரையும் கவனியாத சிரேஷ்டர்.

ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு வருஷங்களாக யுத்தம் விடாமல் நடந்து-

கொண்டே இருந்தது. இக்காலத்தில் சிற்சில சமயங்களில் சிப்பாய்கள் அனுமதி பெற்றுத் தங்கள் மனைவி மக்கள், தாய்தந்தைமார்களைப் பார்த்துச் சில நாள் அவர்களோடு கழிக்கத் தங்கள் தங்கள் வீட்டுக்குச் சென்றார்கள். அவ்வித அனுமதி ஹிட்லருக்கும் உரியதாயிருந்தும், இவர் தம் இடத்தை விட்டுப் போக மறுத்தார். “நான் யாருமற்றவன். என் வரவை எதிர் பார்த்துக்கொண்டிருக்கிறவர் யார்? ஒருவருமில்லை. இதோ பாருங்கள்: இங்கே என் தோழன் இருக்கிறான். இவன் கிருகஸ்தன்; பிள்ளைகுட்டிக்காரன். இவன் போகலாமே! நான் இவனுடைய இடத்திலிருந்து இவன் செய்ய வேண்டுவதாகிய ஊழியத்தைச் செய்துவருகிறேன்,” என்று சொல்லி, நல்ல தோழராய் விளங்கினர். இவர் பற்பல சமயங்களில் காட்டின வல்லமைக்காக, கர்மானிய சக்கரவர்த்தியார் இவருக்கு முதல் வகுப்பு இருப்புச் சிலு-

வையை* அளித்து, மரியாதை செய்தார். இந்த மேன்மை பொருந்திய அடையாளத்தை இவருடைய படத்தில் மார்பின் இடப்பக்கத்திலே காணலாம். இவர் போரில் பல காயங்களை அடைந்தார்; கடைசியில் விஷ ஆவிக் காற்றினால் அதிக வியாதிப்பட்டுக் குருடர்போலாகி, ஆஸ்பத்திரிக்கு அனுப்பப்பட்டார்.

ஐந்து வருஷங்களாக நடந்த யுத்தத்தில் மனிதருக்கு உண்டான கஷ்டம் கடவுளுக்குத்தான் தெரியும். ஜெர்மன் மக்களின் கஷ்டம் கடைசியில் பஞ்சத்தினால் அதிகமாயிற்று. போர்க்களத்தில் ஜெர்மன் சேவகர்களில் ஒருவனுக்கு எதிராக அநேக சத்துருக்கள் நின்றார்கள். இவர்களுக்கு ஆகாரம், மருந்து, மற்ற யுத்தச் சாமான்களில் குறைவு சிறிதேனுமில்லை. ஜெர்மானியருக்கோ, எல்லாவற்றிலும் மிதமிஞ்சின குறைவுண்டு. ஆகவே, கடைசியில்

*Iron Cross

எதிரிகளின் திரளினால் அவர்களுக்குத் தோல்வி நிச்சயமாயிற்று. எனவே, ஜெர்மன் மக்கள் புரட்சியை விரும்பவில்லை. ஆயினும், ஆற்றில் இறங்கிச் சேற்றில் மூழ்கிப்போன யானையின் தலைமேல் தவளையும் ஏறும் அல்லவா? இத்துயரக் காலத்தில் அயல் நாடுகளிலிருந்து பொல்லாத மனிதர் அநேகர்—அவர்களில் யூதர் பலர்—வந்து, சுயநலப் புலிகளாய்த் தேசத்தின் கெடுதியைத் தேடிக்கொண்டு, வேலைக்காரரைப் புரட்சிக்குத் தூண்டினர்; கடைசியில் சக்கரவர்த்தியைத் தள்ளித் தேசத்தை ஆளுகை செய்ய முயன்றனர். சத்துருக்கள் அதைப்பார்த்து வெகு களிப்புக் கொண்டு, 'அயல் தேசம் கெட்டுப்போனால் எங்களுக்குச் சுகமே!' என்று நினைத்தார்கள். இஃது எவ்வளவு தவறானது! இதுமுதல் உலகமெங்கும் வியாபாரம் குறைவு அடைந்து போயிற்று. எல்லாரும் அனுபவிக்கும் கஷ்டங்களுக்கு

இதுதான் முதற்காரணம். "எல்லாத் தேசங்களும் சுகமடையுமாறல் எங்களுக்கும் சுகமே உண்டாகும்," என்று ஹிட்லர் சொல்லுகிறார். இது தர்ம சிந்தையல்லவா?

ஹிட்லர் ஜனத்தின் பெருமூச்சைக் கேட்டும், துயரத்தைப் பார்த்தும், ஜனத்தின்மேல் உள்ள அன்பினல் அதிக துக்கப்பட்டார்; அதைக் கூடிய மட்டும் நிவர்த்தி செய்யத் தமக்குள் நிர்ணயம் பண்ணிக்கொண்டார். அஃது எப்படி ஆகும் என்பது இவருக்கு உடனே தெளிவாகத் தெரியவில்லை. இவர் அப்போது கோடி சேவகர்களில் ஒருவர்; பெரியவரும் அல்லர். இவர் நோக்கம் மிகவும் உயர்ந்ததெனினும், அப்போது இவருக்குப்பலன் என்ன? கோடிக்கணக்கானவர், ஏறக்குறைய எல்லாத் தொழிலாளரும், **மார்க்ஸ்*** என்னும் யூதனுடைய உபதேசத்தை நம்பித் தங்கள் சொந்த தேசத்துக்கு விரோதமாகவும்

*Marx

அநியாயத்தை நீக்கினர். அது முதல் ரோமருடைய அதிகாரம் நிலை குலைந்தது. வெகு காலத்துக்குப் பிறகு ஜெர்மன் மக்கள் **ஹுன்** அல்லது **ஹுங்கரிகள்** என்னும் ஒரு ஜாதியாராலே அதிக கொடுமையை அடைந்தார்கள். அப்போது பகவான் இரங்கி, இரண்டு அரசர்களால் ஜனங்களுக்கு நற்சமாதானத்தை அளித்தார். ஏறக்குறைய 130 வருஷங்களுக்கு முன் ஜெர்மானியர்கள் **நபோலியும்** என்னும் பெயர் பெற்ற சக்கரவர்த்தியால் அதிக கஷ்டப்பட்டபோது பகவான் கிருபை கூர்ந்து **ஸ்தைன் பிரபு** என்னும் நல்ல மந்திரியாலும் **பிலுகர்** என்னும் தைரியமுள்ள சேனதிபதியினலும் விடுதலை அளித்தார்.



ஆல்ப்ஸ் மலையில், பெர்க்டெஸ்காடென் என்னும் இடத்தருகில், ஒபெர்ஸால்ஸ்-பெர்க்கிலுள்ள ஹிட்லரின் வீடு. அவர் ஓய்வு பெற விரும்பும் நாளில் இவ்வீட்டில் தங்குவது வழக்கம்.



## 3. மகா யுத்தத்தின் வரலாறு

**1914**-ஆம் வருஷத்தில் மகா யுத்தம் நேர்ந்தது. இப்பெரிய யுத்தத்துக்கு ஆதி காரணர் இன்னவர் என்பது எவரால் சொல்ல முடியும்? இதைப்பற்றி அநேக தப்பான வதந்திகள் ஏற்பட்டன. 'ஜெர்மானியர்களே இப்போருக்குக் காரணம்,' என்று சத்துருக்கள் உடனே வற்புறுத்தினார்கள். இதற்கு உண்மையான காரணம் அறிய விரும்பினால், பூர்வீக சரித்திர சம்பவங்கள் சிலவற்றை அறிய வேண்டும். 1870-ஆம் வருஷ யுத்தத்தில் ஜெர்மானியர் பிரான்ஸ் தேசத்தார்களை வென்று, அவர்கள் தேசத்தின் ஒரு பாகத்தைத் தம் வசப்படுத்தினர். அது பெரிய அநியாயம் என்று கூறப்பட்டது. அதற்காகப் பிரான்ஸ் தேசத்தார் பழி வாங்கி அத்-

தேசத்தைத் திரும்பக் கட்டாயமாகக் கேட்க வேண்டும். ஆகவே, ஜெர்மானி-யரே யுத்தத்துக்கு ஆதி காரணர் என்-கிறார்கள். அது சரியா? பின் வருவதை வாசித்துவிட்டுச் சொல்லுங்கள்:

ஆயிரம் வருஷங்களுக்கு முன்பு **கார்ல் பெரியவர்** * என்னும் ஒரு சக்கரவர்த்தியார் இருந்தார். அவர், ஜெர்மனி, பிரான்ஸ் என்று இப்போது பிரித்துச் சொல்லப்-படுகிற தேசத்தை ஆண்டுவந்தார். இந்த இரண்டு தேசங்களும் சேர்ந்து அப்போது ஒரே இராச்சியமாயிருந்தன. அவர் மரணம் அடைந்த பிறகு இவ்விராச்சியம் அவருடைய பேரப்பிள்ளைகளால் இரண்டு பங்காகப் பிரிக்கப்பட்டது. இப்போது, மேற்பங்கு **பிரான்ஸ்** என்றும், கீழ்ப்பங்கு **ஜேர்மனி** என்றும் சொல்லப்படுகின்றன. அக்காலத்தில் ஏற்பாட்டினுல் நியமிக்கப்-பட்ட எல்லையை ஜெர்மானியர் எப்போ-

* Charlemagne

தும் பாராட்டி ஒன்றும் பறித்துக்கொள்ள-வில்லை. பிரான்ஸ் தேசத்தார் அநேக அநியாயமான யுத்தங்களால் பங்காகப் பெரிய பாகத்தைப் பறித்துக் கைவசப்-படுத்தினார்கள். 1870-ஆம் வருஷ யுத்தத்-தில் மட்டும் ஜெர்மானியர்கள் ஒரு சிறு பங்கைத் திரும்பக் கேட்டு வாங்கினார்கள். அப்படியானால், அநியாயம் செய்தவர் யார்? மேலும், ஜெர்மனி திரும்ப வாங்கின மாகாணத்தின் மக்களில் ஏறக்குறைய எல்லாரும் பண்டு தொட்டே ஜெர்மன் ஜாதியாராவர். அவர்கள் ஜெர்மன் பாஷை பேசுகிறவர்களே. தவிர, யுத்தத்-தின் ஆதி காரணம் ஜெர்மனியே என்று குற்றம் கூறுகிறவர்கள் இங்கிலீஷ் பிரதம மந்திரியாராகிய லாயிட் ஜார்ஜ்* சொன்ன-தைக் கவனிக்கலாம். அவர், "நாம் எல்லாரும் கால் தவறி இந்த யுத்தத்தில் இடறினோம்," என்று ஒப்புக்கொண்டார்.

*Lloyd George

உண்மை அறியக்கூடியவர் அவர்தான். இந்த யுத்தம் நடந்த காலத்தில் ஜெர்மன் சேவகர் கொடூரமான பொல்லாத அநியாயங்கள் செய்ததாக உலக வதந்தி உண்டாயிற்று. எல்லாத் தபால் தந்திக் கம்பிகளும் எதிரிகள் கைவசத்திலிருந்தமையால், இந்த வதந்திகளைத் தப்பு என்று மறுக்கவும் உண்மையை ஸ்தாபிக்கவும் ஜெர்மானியருக்கு முடியவில்லை. (ஜெர்மானியர் போர்க் களத்தில் மடிந்து போன வீரருடைய பிரேதங்களை வேக வைத்துக் கொழுப்பாக மாற்றி உபயோகித்தார்கள் என்பதைப் பிரிட்டிஷ் மந்திரியார் தாமே பார்லிமெண்டில் மறுத்தார்.) இதில் உண்மை அறிய வேண்டுவோர் **ஸர் ஆர்தர் பான்ஸான்பி*** என்பவர் எழுதிய **யுத்த காலப் பொய்ம்மை**† என்னும் புஸ்தகத்தை வாசித்து அறியலாம்.

---

*Sir Arthur Ponsonby †Falsehood in War Time

## 4. மகா யுத்தத்தின் முடிவு

யுத்தத்தின் கடைசிக் காலத்தில் ஏறக்குறைய 25 பெரிய தேசங்களும் சிறிய தேசங்களும் சேர்ந்து, ஜெர்மனிக்கு விரோதமாக நின்றன. ஆகாரம், குண்டு, மருந்து, கருவி முதலியவைகள் குறைந்த ஒரு கோடி மனிதர்களை, ஆகாரமும், போர்க் கருவிகளும் சம்பூரணமாய்க் கொண்ட பற்பலகோடி மனிதர்கள் எதிர்த்தார்கள். ஆசியாவிலும், ஆப்பிரிக்காவிலும், அமெரிக்காவிலும், ஆஸ்திரேலியாவிலும், பெரும்பாலும் ஐரோப்பாவிலும், எங்கே ஒரு தொழிலாளி, ஒரு கூலியாள், ஒரு குடியானவன் வேலை செய்தாலும், அவன் அதனல் ஜெர்மானியர்களின் எதிரிகளைப் பலப்படுத்தியவனுனன். எல்லாச் சமுத்-

திரங்களிலும் ஓடும் ஒவ்வொரு கப்பலும் அவர்களுக்கு வேண்டிய சாமான்களைக் கொண்டு வந்தது. எல்லாக் காடுகளிலும் வனாந்திரங்களிலுமிருந்து பல ஜாதி மனிதர்களைக் கொண்டு வந்து, அவர்களுக்கு ஆயுதங்களைக் கொடுத்துப் போர்க்களத்துக்கு அனுப்பினார்கள். அப்படியிருக்க, கடைசியில் ஐந்தாம் வருஷத்திலே சண்டையும் இப்படி முடிவு பெறுவது ஓர் ஆச்சரியமா? மேலும், உள் நாட்டில் சில துரோகிகள் வந்து தோல்வியை உண்டாக்க விரும்பி, அதற்கு விடாமுயற்சி செய்தார்கள். யுத்தம் நடந்துகொண்டே இருந்த போது தகுந்த வயதில் சுதேச ஆடவர் எல்லாரும் போர்க்களத்தில் இலட்சக் கணக்காகத் தம் உயிரை விட நேரிடவே, கீழ்த் தேசங்களிலிருந்து பரதேசிகள் (பெரும்பாலோர் யூதர்கள்) வந்து, வேறு கதி இல்லாதவர்களாய்த் தேசத்தில் புகுந்து, சீவனம் பண்ண ஆரம்பித்தார்கள். அஃது எப்படி?

பலமுள்ள ஆண் பிள்ளைகள் எல்லாம் போர்க் களத்தில் இருந்தமையால், பெண்களும், பிள்ளைகளும், கிழவரும் விவசாயம் செய்யும் போது குடியானவர்களின் தெருவுக்குப் போய், "அம்மா, பலவீனமுடைய பெண் பிள்ளைகளாகிய உங்களுக்கு உழுவதிலும் அறுப்பதிலும் நாங்கள் உதவி செய்வோம்," என்றார்களா? இல்லவே இல்லை. அல்லது உலோகங்களின் உற்பத்தி ஸ்தலங்களுக்குப் போய், அங்கே உழைக்கிறவர்களைப் பார்த்து, "உங்களோடு சுரங்கங்களிற் புகுந்து கஷ்டப்பட்டு, நீங்கள் ஜெயம் அடைவதற்கு நாங்களும் வேலை செய்வோம்" என்றார்களா? இல்லவே இல்லை! பின் என்ன செய்தார்கள்? பேரம் பேசுவதில் அவர்கள் யுக்தியுள்ளவர்களாதலால், குடியானவர்களின் தெருவுக்குப் போய், விலை அதிகம் கொடாமல், வஞ்சக வார்த்தைகளை அதிகமாகப் பேசி, தானியங்களை வாங்கி, விலையை அதிகமாக

ஏற்றி, அவற்றை ஏழைகளுக்கு விற்றார்கள். அதனால், அடைந்த இலாபத்தினால் பின்னும் சரக்குகளை வாங்கி, விலையை ஏற்றி விற்றார்கள். இவ்வாறு அவர்கள் ஊசிபோலத் தேசத்தில் புகுந்து, சிறிது காலத்தில் யானைகளைப் போல வளர்ந்தார்கள்; அதனால், ஆகாரம் குறைவாகிச் சுதேச மக்கள் கோடி கோடியாகப் பட்டினி கிடக்க நேர்ந்தது. அவர்களோ, நாளுக்கு நாள் சுகமும் செல்வமும் உடையவர்களானார்கள்; தவிர, இரகசியமான துர்ப்போதனையினாலே தொழிலாளர் கட்சியைச் சேர்ந்தவர்களின் மனத்தையும் புத்தியையும் கெடுத்து, ஜெர்மானியர்களுக்குத் தோல்வி உண்டாகும்படி துரோகம் செய்து, அநேகரைப் புரட்சிக்குத் தூண்டினார்கள். அவர்களுடைய உதவியினால் சத்துருக்கள் சித்தி பெற்றார்கள். இது பெரும்பாவச் செயலல்லவா?

எப்படியோ இந்த மகா யுத்தம் முடிவு

அடைந்தது. பின்பு சமாதான ஏற்பாட்டுக்கு வழி உண்டு என்று தோன்றிற்று. நியாயமான ஏற்பாடு செய்ய வேண்டும் என்று அப்போது அமெரிக்காவின் தலைவரான **பிரஸிடெண்டு வில்சன்*** ஐரோப்பாவுக்குச் சென்றார். இயேசு உலகத்திற்கு வந்த போது, "உலகத்து இரட்சகர் இதோ வருகிறார்!" என்று மனிதர்கள் நினைத்துச் சந்தோஷங் கொண்டார்கள். அதைப்போல இப்பொழுதும் பிரஸிடெண்டு வில்சனைக் கண்ட மக்கள் களி கூர்ந்தார்கள். அவர் மத்தியஸ்தராக எதிரிகளின் பேரிலே ஆணைபோல ஏற்பாட்டின் அஸ்திவாரமாக 14 ஸ்தாபனங்களைச் செய்திருந்தார். இரு பக்கத்தாரும் அவற்றை ஏற்றுக்கொண்டனர். அந்த 14 ஸ்தாபனங்கள் ஜெர்மானியருக்குப் பெரும்பாலும் அதிக கஷ்ட நஷ்டமாயிருந்தாலும், இன்னும் மற்றப் பெரிய நஷ்டங்களுக்குத் தப்பிப்

---

*President Wilson

போகும்படி விசனத்தோடு அவற்றை ஏற்றுக்கொண்டனர். அவற்றின்படி ஜெர்மானியர் பிரான்ஸ் தேசத்தில் இருந்த தம் இராணுவத்தை மீண்டும் அழைத்ததும் அன்றி, ஆயுதங்களையும் சத்துருக்களுக்கு ஒப்புக்கொடுத்தனர். அஃது உண்டான உடனே 14 ஸ்தாபனங்களை மறந்துவிட்டு, ஜெர்மனிக்கு அதிக நஷ்டமான ஏற்பாடு செய்யப்பட்டது. அது நியாயமான ஏற்பாடோ, அல்லவோ என்பதைப்பற்றி அறிய விரும்புவோர், ஜான் ஆர்* என்பவர் எழுதிய 'தி புரோக்கன் பிளேட்ஜ்'† என்னும் புஸ்தகத்தை வாசிக்கலாம். வில்சன் ஐரோப்பா விஷயங்களில் அதிகம் தெரியாதவராதலால், என்றென்றைக்கும் பரிதபிக்கத் தக்க நியமனங்களுக்குச் சம்மதித்தார். திருஷ்டாந்தமாகத் தென் திரோலில்‡ ஜெர்மன் பாஷை பேசும் இரண்டரை இலட்சம் மக்கள் தங்கள் சொந்த விருப்-

---

*John Orr †The Broken Pledge ‡South Tyrol

பத்துக்கு விரோதமாக இதாலிக்குப் பொருள் போலக் கொடுக்கப்பட்டார்கள். சார் மாகாணத்தைப் பிரான்ஸ் இச்சித்ததனுல், இம்மக்களில் பெரும்பாலோர் பிரெஞ்சு ஜாதியாராய் இத்தேசத்துக்குத் திரும்பிப் போக விரும்புகின்றனர் என்று சொல்லப்பட்டது. வில்சன் அதை நம்பி, சார் தேசத்தை ஜெர்மனியிலிருந்து பிரித்துப் பிரான்சுக்குக் கொடுக்கச் சம்மதித்தார். பதினைந்து வருஷங்களுக்குப் பிறகு சார் மாகாண மக்கள் அதைப்பற்றித் தேர்தல் செய்யலாம் என்று முடிவு செய்யப்பட்டது. 1935-ஆம் வருஷம் தேர்தல் நடந்தது. அதன் முடிவு என்ன? பிரான்ஸ் கடைசியாக ஜயங்கொண்ட ஐசுவரியமுள்ள தேசமானுலும், நூற்றில் மூன்று பெயர்கூடப் பிரான்சுக்குப் போக விரும்பவில்லை. அது முந்தியே தெரிந்திருக்கக் கூடாதா? இந்தப் பிரச்சினையினுல் உலகத்தின் சமாதானத்துக்கு

அவ்வளவு ஆபத்து உண்டாக்க யாதொரு அவசியமும் ஏற்படவில்லை. இந்தக் கீர்த்தி இல்லாத வேலை முடிந்த பிறகு, தலைவராகிய வில்சன் அமெரிக்காவுக்குத் திரும்பி வந்த போது, அவருடைய சொந்த மக்கள் அவ்வேற்பாட்டை மறுத்து, அவரை அவமானப்படுத்தினர்கள்; உலகத்தின் இரட்சகராகவும் மத்தியஸ்தராகவும் ஐரோப்பாவுக்கு அனுப்பப்பட்டவரையே இவ்வாறு செய்தார்கள். தம் சொந்த உறுதி இல்லாமையினல் உலக சமாதானத்துக்கு ஏற்ற சமயம் தப்பிப் போய்விட்டது என்று அவர் நன்கு உணர்ந்து, வியாதிப்பட்டு, இறந்து போனர்; குன்றின்மேலிட்ட விளக்கைப்போல வந்தவர், இருளில் அவிந்தார். இப்போது அவருடைய பெயரை இரட்சகர் பெயராக எவன் உச்சரிக்கிருன்? அந்தக் கொஞ்சங் கூழுக்கு அத்தனை திருநாமங்கள்! என்பதுபோல ஆயிற்று.

ஜெர்மானியர் இந்த நியமனங்களுக்குச்

சம்மதிக்க மறுத்ததனால், ஆயுதப் பலத்தி-
னாலும் பசியினாலும் சம்மதிக்கக் கட்டாயப்-
படுத்தப்பட்டனர். உலகத்தின் நாகரிகத்-
துக்கும் கல்வி கலைகளுக்கும் பெரிய
ஊழியம் செய்து வந்த ஒரு சமூகத்தினரை
முழுவதும் அழிக்கவும் என்றென்றைக்கும்
அடிமைத்தனத்தில் வைத்து அடக்கவும்
இதுதான் தக்க ஏற்பாடு.

## 5. புரட்சி

அந்தக் காலம் முதல் யுத்த காலத்தைப் பார்க்கிலும் ஜெர்மனி தேசத்துக்குச் சொல்ல முடியாத கஷ்டம் உண்டாயிற்று. சத்துருக்கள் அப்போது தேசத்தின் மேல் பாகத்தை **ரைன்*** என்னும் நதியோரத்தில் கைவசப்படுத்தியிருக்க, உள் நாட்டில் புரட்சி ஏற்பட்டது. அப்பொழுது இரண்டாம் **வில்லியம்**† என்பவர் சக்கரவர்த்தியாராய் இருந்தார். அவரைப்பற்றி உலகம் எங்கும் எண்ண முடியாத உண்மையில்லாத வதந்திகளாலும் தூஷணைகளாலும் நிரப்பப்பட்டது. நாம் அவைகளைச் சோதித்துப் பார்க்கும் முன்னே நம்பலாமா? அவர் வெளியே அதிக கௌரவத்தைக் காட்டினாராலும், உண்மையில் திறமையில்லா-

---

* The River Rhine    †William II

தவர்; கண்டிப்பானவர் அல்லர்; அதிக சாந்தமுள்ளவர். அவரே யுத்தத்திற்கு ஆதி காரணர் என்று அநேகர் அவரைத் தூஷிக்கின்றனர். இது பெரும்பிழை. யுத்தம் கட்டாயமாக வேண்டுமென்று அவர் இச்சித்திருந்தால், பத்துப் பதினைந்து வருஷங்களுக்கு முன்னமே செய்திருக்கலாம். பிரிட்டன் தென் ஆப்பிரிக்காவில் கை கட்டப்பட்டிருந்தபோது, ருஷியா ஜப்பானுல் அடியுண்டு புரட்சியினுல் சிதைக்கப்பட்டபோது, ஜெயம் பெறுவது அதிக சுலபமாயிருந்தது. அஃது அவருக்குத் தெரியவில்லையா? அந்தச் சாந்த குணம், அந்த உறுதி இல்லாமை, அந்தத் திறமையின்மைதான் அவருடைய தவறு. அதனுல் அவர் ஒரு பெரிய இராச்சியத்துக்குத் தக்க தலைவர் அல்லர்.

"குடிபுறங் காத்தோம்பிக் குற்றங் கடிதல்
வடுவன்று; வேந்தன் தொழில்."

—திருக்குறள், 549.

அவருடைய தவற்றினல் இந்த இராச்சியம் கெட்டுப் போயிற்று. அவர்மீது குற்றம் சுமத்த வேண்டுமானல், துஷ்டக் குணத்துக்காக அவரைக் கண்டிக்கச் சத்துருக்களுக்கு இடம் இல்லையே! அவரைக் கண்டிக்க அவசியமானல், சத்துருக்களுக்கு அல்ல, ஜெர்மன் மக்களுக்கு மட்டும் இடம் உண்டு. அவருடைய தப்பிதமான சாந்தமுள்ள தைரியமில்லாத மனம்காரணமாகத்தான் அவரைக் கண்டிக்கலாம். யுத்தத்தின் முடிவு காலத்தில் துரோகிகள் தங்கள் பொல்லாத முயற்சியை ஆரம்பித்துச் செய்த போது அவர் அவர்களைத் தண்டித்து முற்றிலும் அழித்துவிட்டிருக்க வேண்டும் அல்லவா? அவர்களைத் தண்டிக்காமல் விட்டுவிட்டதனல், அவரே தம் தேசத்தை நீங்கிப் பரதேசத்துக்குப் போக நேர்ந்தது; உள் நாட்டில் புரட்சி குடி கொண்டது.

"கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ்
களைகட் டதனொடு நேர்." —திருக்குறள், 550.

இப்போது துரோகிகளுக்கு அதிகாரத்தைச் செலுத்தவும், தேசத்தைத் தாங்களே ஆளவும் இடையூறு இல்லை. அவர்கள் சத்துருக்களிடத்தில் புகழ் பெற்றார்கள். ஏனெனில், அத்தனை ஜயங்களைக் கொண்ட ஜெர்மன் இராணுவத்தின் கடைசிப் படைப் பாகங்களை அழிக்கச் சத்துருக்களுக்கு உதவி செய்தார்கள்.

"தன்னா யுதமும் தன்கையிற் பொருளும்
பிறன்கையிற் கொடுக்கும் பேதையும் பதரே."

—வெற்றி வேற்கை

என்பதை அவர்கள் அறியவில்லை. தேசத்தை நிராயுத பாணியான—காவலற்ற—நிலையில் தள்ளினார்கள். தாங்கள் சாந்தமானவர்கள் என்றும் யுத்தத்தைப் பகைக்கிறவர்களென்றும் சொல்லி, தேசத்தை இரட்சிப்பதற்காகத் தன்

ஜீவனை விட்ட சேவகனைக் கொலை பாதகன் என்று நிந்தித்தார்கள். "தாய்த் தேசத்தின் காவலுக்கு அவசியமான எந்த இரகசியத்தையும் சத்துருக்களுக்குக் காட்டிக் கொடுக்கத் தயாராயிருக்கிறேன். நான் செய்ய இயலாத தேசத் துரோகம் ஒன்றுமில்லை. தேசத் துரோகி என்று என்னை ஒருவர் சொன்னால், அஃது எனக்குப் பெருமையே," என்று துரோகி ஒருவன் சொன்னான். தன் சீவனை இரட்சிக்க இராணுவத்தையும் அரசனையும் தோழனையும் விட்டுத் தன் கடமை தப்பி ஓடின சேவகனைப்* புகழ்ந்தார்கள். ஒரு தேசத்தில் இப்படிப்பட்ட மனுஷர்கள் ஆளுகை செய்தால், அந்தத் தேசத்தின் மக்கள் பிழைத்தல் இயலுமா?

*Deserter

## 6. எல்லாம் பாழ்.

அக்காலத்தில் இன்னும் அநேக பர-தேசிகள் (அவர்களில் பெரும்பாலோர் யூதர்) வந்து, சுலபமாய்ச் சுகவாழ்க்கையை நடத்தினர்கள். ஈக்களால் விரும்பப்படு-பவை காயங்களும் பிரேதங்களுமே அல்-லவா? ஜெர்மனி அப்போது புண்பட்ட பிரேதம் போல இருந்தது. உலகத்தில் எல்லா மூலைகளிலுமிருந்து பரதேசிகள் வந்து ஈக்கள் போல மொய்த்து மொய்த்துத் தேசத்தில் வழங்கும் நாணய முறையை முற்றும் கெடுத்தார்கள். இந்தியாவில் ரூபாய் செல்லுகிறது போல, இங்கிலாந்தில் ஷில்லிங்கும், ஜெர்மனியில் மார்க்குஎன்னும் நாணயமும் செல்லுகின்றன. முற்காலத்-தில் ஒரு மார்க்கு ஒரு ஷில்லிங்குக்குச் சரி. இப்போதோ, மார்க்கின் மதிப்புக் குறைந்து கொண்டே போகும்படி செய்தார்கள். வர

வர ஒரு ஷில்லிங்குக்கு 2 மார்க்கு, 5 மார்க்கு, பத்து, நூறு, ஆயிரம், பதினயிரம், இலட்சம், கோடி மார்க்குகள் கொடுக்க வேண்டும். அல்லது ஒரு ஷில்லிங்கு உடையவன் ஜெர்மனிக்கு வந்து, அந்த ஒரே ஷில்லிங்குக்கு இலட்சம் மார்க்குகளை வாங்கலாம். இது பைத்தியக்காரத்தனமாகத் தோன்றுகிறதல்லவா? அவ்வளவு அடியெட்டாத கேட்டில் ஜெர்மன் பொருளாதாரம் வீழ்த்தப்பட்டது. பத்து ஆயிரம் வருமானமுள்ள உயர்ந்த ஓர் உத்தியோகஸ்தன் தன் வருமானத்தினல் ஒரு ரொட்டியையுங்கூட வாங்க முடியவில்லை. அப்படியானல், எளியவர்களால் எப்படி முடியும்? எல்லாத் தேசங்களிலிருந்தும் பரதேசிகள் வந்து கால் பவுன் கொடுத்து உயர்ந்த ஆபரணங்களையும், வீடு நிலங்களையும் வாங்கித் தேசத்தின் பொருள்களையும் செல்வத்தையும் சுரண்டிக்கொண்டு போய்த் தங்களுக்கு உரியவையாக்கினர்-

கள். அப்படிச் செய்கையில், தேசத்தின் சோற்றைச் சாப்பிடுகையில், தேசத்தின் மக்களை அசட்டை பண்ணி நிந்தித்து, அவர்களைப் பற்றிச் சொல்ல முடியாத பொய்களை வெளித் தேசங்களின் பத்திரிகைகளில் பிரசுரித்தார்கள். தங்கள் சொந்தத் தேசங்களில் வேலை இல்லாமல் பட்டினியாய்க் கிடந்த ஆசாமிகள், தங்கள் ஊரில் கொஞ்சம் உபகாரப் பணத்தைப் பெற்றுக்கொண்டு, ஜெர்மனிக்கு வந்து, பிரபுக்களைப் போலக் காலங் கழித்தார்கள். யாதொரு பையும் பெட்டியுமில்லாமல், கிழிந்த துண்டுகளை உடுத்துக் கையில் சில பவுன், பிராங்கு, டாலர்களுடன் புறப்பட்ட பரதேசிகள், ஜெர்மனியில் புகுந்து, உயர்ந்த ஹோட்டல்களில் இறங்கித் தங்கி, உயர்ந்த ஆகாரத்தைச் சாப்பிட்டு, ஒயின் சாராயத்தைக் குடித்து, துப்புக் கெட்ட நடத்தையைக் காட்டி, விலை உயர்ந்த சாமான்கள் வாங்கி நிரப்பப்பட்ட அநேக

பெட்டிகளோடு தேசத்தை விட்டுச் சென்றார்கள். சிலர் திரும்பிச் செல்லவே இல்லை. " இந்தத் தேசத்தில் இருப்பதே எங்களுக்கு நலம். இந்தத் தேசத்தில் எங்கள் நெல் செழிக்கிறது. இங்கே நாங்கள் உழைக்காமல், விதை விதைக்காமல், அறுவடை செய்யலாம்,'' என்று நினைத்துத் தங்கள் சிறு முதலைக்கொண்டு வியாபாரம் செய்யத் துவக்கினார்கள். ஒரு கை வேலையும் செய்யாமல், டெலிபோன் மூலமாக விலை பேசிப் பொருள்களை வாங்கி, நாற்காலியிலமர்ந்தபடியே விலை ஏற்றி, டெலிபோன்* மூலமாகவே விற்றுப் பெரிய இலாபம் அடைந்தார்கள். இந்த இலாபத்தினால் புரட்சியில் ஆளுகை அடைந்த துரோகிகளுக்கு இலஞ்சம் கொடுத்து மோசத்தால் பெற்ற பணத்தினால் சில பத்திரிகைகளின் பிரசுரங்களையும் அவைகளின் ஆசிரியர்களையும் விலைக்கு வாங்கி, அல்லது தங்கள்

*Telephone

ஜாதியாரைப் பத்திரிகைக்கு ஆசிரியராக நியமித்து, அதனல் தேசத்தில் எல்லா வல்லமையையும் கைவசப்படுத்தினர்கள்; பிறகு மக்களின் மானத்தையும், நாணத்-தையும் இன்னும் கெடுக்கப் பிரயாசப்பட்-டார்கள்; மூதாக்கள் செய்த பராக்கிரமச் செயல்களேயும், பிரமுகர்களேயும், ஊழி-யரையும் பரிகாசம் பண்ணி, தெய்வ பக்தி-யையும் குரு பக்தியையும் அழித்து, சிறு பிள்ளேகள் பள்ளிக்கூடங்களில் ஜெபம் பண்ணுவதையும் மறுத்தார்கள்; தெய்வ பக்தியும் விசுவாசமும் மூடர்களுக்கு மட்டும் உரியவை என்று அநேக கேவலமான படங்களோடு அச்சிட்ட புஸ்தகங்களால் ஜனங்களுக்கு உபதேசித்தார்கள்; இன்-னும், பக்குவம் அடையாத வாலிபர்கள் தங்கள் இஷ்டப்படி சிற்றின்பங்களில் நுழைவதை ஒருவரும் தடுக்கக்கூடாது என்று பிரசங்கித்தார்கள்; எல்லா நாணத்-தையும் விட்டுத் துஷ்ட நாடகங்-

களையும் நிர்வாணமான நடிகைகளையும் காட்டினார்கள்; இயல்பிற்கு விரோதமான இச்சைகளை அனுசரிக்கிறவனைத் தண்டிக்கக்கூடாது என்று போதித்தார்கள். தீய படங்களால் நிரப்பிய தீய கதைப் புஸ்தகங்கள் அப்போது எந்தக் கடையிலும் தாராளமாக விற்கப்பட்டன. ஹிட்லர் ஆட்சியில் அவை காணப்படவில்லை.

தன் மானத்தை மதிக்கும் ஒரு சமூகம் இப்படிப்பட்ட அக்கிரமங்களைச் சகிக்க முடியுமா? முடியவே முடியாது. ஜெர்மானியர் கடைசியில் அத்தீயவர்களுடைய பித்தலாட்டத்துக்கு முடிவு தேடியது உலகத்துக்கு ஒரு பெரிய ஆச்சரியமா? அவர்களுடைய பொல்லாத வழியை விரைவில் அறிந்து, சமூகத்துக்கு ஓயாமல் அதை எடுத்துக் காட்டி, "இதைப் பின் பற்றாதீர்கள்," என்று கூறி, ஜனங்களின் கண்களைத் திறந்தவர் ஹிட்லரேயாவர். அதனாலேதான் அவரைப் பகைக்கிறார்கள்;

அவரைப் பற்றி அத்தனை பொய்களைச் சொல்லுகிறார்கள்.

"எப்போது இத்தேசத்துக்கு இரட்சகர் வருவார்?" என்று மக்கள் ஏங்கினார்கள். எங்கே பார்த்தாலும் எல்லாம் பாழ்! பாழ்!! பாழ்!!! வியாபாரம் கெட்டது. தொழிலாளர் வேலையில்லாமல் அறுபது இலட்சம் பேர் பட்டினியாய்க் கிடந்தனர். அநேகர் நம்பிக்கை இன்மையினால் தற்கொலை செய்துகொண்டனர். "தாய் தகப்பன்மார் இரண்டு மூன்று பிள்ளைகளோடு தற்கொலை செய்துகொண்டனர். அன்னார் பிரேதங்கள் ஆற்றில் அகப்பட்டன," என்பது போன்ற செய்திகளைப் பத்திரிகையில் தினந்தோறும் வாசிக்கலாம். இந்த வருஷங்களில் இரண்டேகால் இலட்சம் பேர் தற்கொலை செய்திருக்கின்றனர்.

## 7. ஒரு பெரிய ஆத்துமா செய்த தீர்ப்பு

இப்படித் துயரம் அதிகரித்துக்கொண்டு இருக்கையில் கம்யூனிஸ்டுக் கட்சியார்* இரகசியத்தில் பயங்கரமான இன்னொரு புரட்சிக்கு ஆயத்தம் பண்ணினர். அவர்கள் நோக்கம் முடிந்திருந்தால், குழந்தை, பெண் பிள்ளை, கிழவி, கிழவர் உட்பட எண்ணிறந்த மனிதர்களுக்கு மரணம் நிச்சயம் ஏற்பட்டிருக்கும். உள் நாட்டில் யுத்தம் நேர்ந்தால், ஜெர்மன் மக்களுக்கு முடிவு ஏற்படுவது திண்ணம். பகவான் இரட்சிக்க மாட்டாரா? துயரம் அதிகமான போது அவர் ஒத்தாசை செய்தார். தேடிப்போன மருந்து கடைசியில் காலில் தடுக்கிக் கிடைத்தது.

யுத்தத்தின் கடைசிக்காலத்தில் ஹிட்லர் விஷ ஆவிக் காற்றினுல்§ அதிக வியாதி

*The Communists §Poison Gas

அடைந்து, குருடர்போல ஆஸ்பத்திரியில் கிடந்தார். அக்காலத்தில் தோல்வி முடிவு பெற்றுப் புரட்சி நடந்தது. ஹிட்லர் இருந்த அறைக்குள் திடீரென்று ஓர் ஆள் புகுந்து, "யுத்தம் முடிந்தது! சக்கரவர்த்தி வீழ்க! புரட்சி! புரட்சி!! புரட்சி வாழ்க! வாழ்க!! இப்போது நல்ல காலம் வரப் போகிறது! சுயேச்சை ஏற்பட்டுவிட்டது!" என்று பைத்தியக்காரனைப் போல ஆடிப் பாடிக் களிகூர்ந்தான். ஹிட்லர் அதைக் கேட்டுத் துக்கத்தினால் மெய்ம்மறந்து, கண்ணீர்விடத் தொடங்கினார். தம் தாயார் இறந்து போன காலம் முதல் அவர் கண்ணீர் விடவில்லை. யுத்தத்தில் தாம் பெரிய கஷ்டங்களை அடைந்தாலும், தம் தோழர்கள் மரணமடையக் கண்டாலும், ஒரு துளி நீரும் அவர் கண்களிலிருந்து விழுந்ததில்லை. தம் ஜனத்தின் தோல்வி நிச்சயமாகத் தெரிந்த இப்போது அவர் திக்கற்ற பிள்ளைபோல அழுதார்; மிக்க விசனத்-

தோடு நாட்டின் துர்ப்பாக்கியத்தை உணர்ந்தார். அபஜயத்தினுல் ஜனத்துக்கு வரப்போகிற மேலே உரைக்கப்பட்ட துயரங்களையும் பாடுகளையும் அவர் முன்னுடி அறிந்தார்; சாகிறவரைப்போல விசனப்பட்டார். ஆயினும், "நான் யார்? என்னுல் என்ன முடியும்? வரப்போவது வரட்டும். எல்லாம் விதி; தலை எழுத்துத்தான்!" என்று அவர் எண்ணவில்லை. அவர் அந்த இரவில் குருடனைப்போலத் தம் சயனத்தில் இருட்டிலே கண் மூடாமல் விழித்திருந்த போது அவருடைய மூளையில்—மனத்தில்—பல வித எண்ணங்கள் போராடின. கடைசியில் அவர் தம் பற்களைக் கடித்து, உதடுகளை அதுக்கி, "என்னுல் ஆகுமட்டும் நான் நிவர்த்திப்பேன். அதுதான் என் வாழ்க்கையின் முதலான நோக்கம்!" என்று எண்ணினுர்.

"வினைத்திட்பம் என்பது ஒருவன் மனத்திட்பம்;
மற்றைய எல்லாம் பிற." —திருக்குறள், 661.

## 8. புதுத்தர்மம்

அவர் சுகமானவுடனே மூனிக்குப் பட்டினத்துக்குப் போய்த் தம்மைப் போல நினைக்கிறவர்களைத் தேடினார். அந்த ஊரில் சில தொழிலாளர் முதலியவர்கள் தங்கள் மனத்தைச் சோஷலிஸ்துக் கட்சி* அதிகாரிகள் கெடுக்க இடம் கொடாமல், அந்தத் துரோகிகளின் எண்ணங்களைத் தடுக்கப் பிரயத்தனம் செய்தார்கள். ஹிட்லர் அவர்களைப்பற்றிக் கேள்விப்பட்டு அவர்களுடைய கூட்டத்துக்கு வந்த போது ஆறு பெயர்களைக் கண்டு பிடித்தார். அக்கூட்டம் அவ்வளவு அற்பமான கூட்டம்! அவர் ஏழாவது பெயராகச் சேர்ந்தார். கூட்டத்தின் தலைவர் அவரே. அது முதல் அக்கூட்டம் வளர்ந்துகொண்டே இருந்தது. கற்றோரும் மற்-

---

*The Socialists

றோரும், எல்லா வகுப்பினரும் வந்து சேர்ந்தனர். இன்னின்ன நாளில் இன்னின்ன மண்டபத்தில், ஹிட்லர் பிரசங்கம் செய்வார் என்று அறிய நேர்ந்தால், அவர் சொல்லைக் கேட்க ஆயிரக் கணக்காக மக்கள் வருவார்கள்; ஒருவரையொருவர் இறுக்கி நெருக்கிக்கொண்டு நிற்பார்கள். அவருடைய வார்த்தை நெருப்புப்போலப் பரவி, ஜனங்களுடைய இருதயங்களை நன்முயற்சிக்கு விரையச் செய்தன.

அக்காலத்தில் ஆளுகை செய்தோர் சீக்கிரத்தில் இதைக் கேள்விப்பட்டனர்; கேட்டவுடனே இதைத் தடுக்க முயன்றனர். தடுக்க எவ்வளவு அதிகமாய்ப் பிரயத்தனப்பட்டார்களோ, அவ்வளவுக்கு அதிகமாய் மக்கள் சேர்ந்தார்கள். ஏன்? மக்கள் அதனால் உணர்ந்துகொண்டது என்ன? "தம் சமூக மக்களை உண்மையாய் நேசிக்கும் ஒரு சீலர் இங்கே இருக்கிறார். யுத்தத்தின் பெரிய ஆபத்தில் தேசத்

தின் சுதந்திரத்துக்கும் தோழர்களின் சுகத்துக்கும் தம் உயிரைக் கொடுக்கத் துணியும் ஒருமனிதர் இவர்; சத்துருக்களால் தேசத்துக்கு உண்டான அவமானத்தைத் தம் அவமானமாக உணர்ந்துகொள்ளும் ஓர் ஆத்துமா; பணத்தையும் பதவியையும் வாழ்வையும் இச்சித்துத் தேடிக்கொள்-ளாதவரும் ஏழையான சகோதரனுடைய நன்மையைத் தேடுபவரும், சரியான வழியைத் தேவனுடைய அருளாலே உணர்ந்து தெரிந்துகொள்ளுபவருமாகிய ஒரு பெரிய ஆத்துமா,'' என்று ஜனங்கள் உணர்ந்துகொண்டார்கள்.

"இடும்பைக்கு இடும்பை படுப்பர் இடும்பைக்கு
இடும்பை படாஅ தவர்."

—திருக்குறள், 623.

இவருடைய கூட்டம் பெரிய கட்சியாக வளர்ந்ததைக் கண்ட எதிரிகள், இவர் பேசப் போகுங் கூட்டங்களைக் கலகம்

பண்ணிச் சிதறடிக்கப் பொல்லாத ஆசாமி-களைத் தூண்டி, அவர்களுக்குப் பணமும் ஆயுதங்களும் கொடுத்து அனுப்பினார்கள். போலீஸார்கள் எதிரிகளின் கையில் இருந்ததனால், அக்கலகத்தைத் தடுக்க அவர்கள் முயலவில்லை.

"மடுத்தவாய் எல்லாம் பகடன்னான் உற்ற
இடுக்கண் இடர்ப்பாடு உடைத்து."

—திருக்குறள், 624.

அன்றோ? அப்போது ஹிட்லரின் நண்பர் சிலர் ஆயுதமில்லாமல் வெறுங்கையால் அந்த ஆசாமிகளை வெளியே துரத்தி அடித்தனர்; அப்படிச் செய்து, கூட்டத்-தைக் கலையாமல் காப்பாற்றினர். அவர்-களை ஹிட்லருடைய தொண்டர்களென்றே சொல்லலாம். இந்த முயற்சிகளில் சிலர் தம் உயிரையே விட்டுவிட்டனர். அந்தத் தொண்டர் எல்லா ஊர்களிலும் கூடித் தேசத்துக்கு ஊழியம் செய்ய முழு மனத்-



ஹிட்லர் நுரிம்பெர்க்கில் தம் தொண்டர் கூட்டத்திற் பேசப்போகிறார். நடுவில் படி ஏறுகிறவர் ஹிட்லர்.

துடன் அவருக்குச் சகாயம் செய்தனர். அவர்களில் ஒரு வகுப்பினர் நீர்க்காவி நிறமான உடைகளையும், மற்ற வகுப்பினர் கறுப்பான உடைகளையும் உடுக்கின்றனர். முந்தின வகுப்பு "எஸ். ஆ."‡ என்றும், பிந்தின வகுப்பு "எஸ். எஸ்."§ என்றும் சொல்லப்படும். இவ்விதமாக ஹிட்லர் ஒரு புதுத்தர்மத்தை ஸ்தாபிக்கப் போராட்டம் செய்யத் தொடங்கி, அநேக வருஷங்களாகக் கஷ்டப்பட்டுக் களைப்பில்லாமல் முயன்றார். மோட்டார் வண்டியிலும், விமானத்திலும், ஊர் ஊருக்கு, ஜில்லா ஜில்லாவுக்குச் செல்ல அவருடைய தொண்டர்களின் கூட்டம் அதிகரித்தது. ஆறு பேரோடு தொடங்கிய கூட்டம் இப்போது ஆயிரமாகவும், இலட்சமாகவும், கோடியாகவும் வளர்ந்து, ஜெர்மன் பார்லிமெண்டில் பெரிதான கட்சியாயிற்று. கடைசியில் இராச்சியத்தின் தலைவரான பெரிய

‡ S. A. § S. S.

சேனாபதியாகிய பிரசிடெண்டு ஹிண்டன்-புர்க்கு* ஹிட்லரைப் பிரதான மந்திரியாராக ஏற்றுக்கொண்டு, அதிகாரத்தை ஒப்புக்-கொடுத்தார். அது ஜெர்மன் சரித்திரத்தில் ஒரு முக்கியமான நாளாயிற்று.

இச்செயல், ஒரு குஷ்டரோகி தன் விகாரமான தோலை எறிந்துவிட்டுச் சுக-மும் சுத்தமுமுடையவனாய் நின்றது போல இருந்தது. வெளியே அடையாளமாக அந்தத் துரோகிகள் புரட்சியில் நியமிக்கப்-பட்ட கொடி (கறுப்பு, சிகப்பு, பொன் நிறமுள்ளது) அழிக்கப்பட்டு, முந்தின இராச்சியத்தை ஸ்தாபித்த போது பிஸ்-மார்க்குப் பெரியவர்§ நியமித்த கொடி (கறுப்பு, வெள்ளை, சிகப்பு நிறக் கொடி) மறுபடியும் உயர்த்தப்பட்டது. இந்தக் கொடியின் மேன்மைக்காக இரு நூறு லட்சத்துக்கு அதிகமான ஜெர்மன் மக்கள் தங்கள் இரத்தத்தைச் சிந்தித் தங்கள்

---

*President Hindenburg §Bismarck

சீவனை விட்டுவிட்டார்கள். தம் அடையாளத்துக்காக ஹிட்லர் சுவஸ்திக்காவை* ஏற்றுக்கொண்டிருந்தார். சுவஸ்திக்கா என்பது ஜெர்மன் முற்பிதாக்களுக்குத் தெரிந்த ஓர் அடையாளம். அஃது உதிக்கும் சூரியனுக்கு ஓர் அறிகுறியாக இருந்ததாம். ஏன்? அவமானத்தின் இருள் சென்று வெளிச்சமாயிற்றல்லவா?

“ எண்ணிய எண்ணியாங் கெய்துப எண்ணியார்
திண்ணியர் ஆகப் பெறின்.” ---திருக்குறள், 666.

---

*Swastika, a hooked cross.

## 9. புது வீடு கட்டப்படும்.

இப்போது ஹிட்லர் ஜெர்மனியில் உத்தம-மான அதிகாரி. சமூகம் அநேக கட்சி-களால் பிரிக்கப்பட்டது. பல கட்சிகளின் தலைவர்கள் தங்கள் நன்மையையும் தங்கள் கூட்டத்தாரின் சுகத்தையும் மட்டும் தேடி-னார்கள். "நாங்கள் இவ்விராச்சியத்தின் அழிவைத் தேடுகிறோம்," என்று கம்யூ-னிஸ்துக் கட்சியார்கள் தெளிவாக ஒப்புக்-கொண்டார்கள்; அப்படி எண்ணியும், பார்லிமெண்டு அங்கத்தினர் சம்பளத்தைக் கைக்கொண்டார்கள். ஆகவே, ஜெர்மன் பார்லிமெண்டு ஜனத்தின் சுகத்துக்கு ஒரு தடையாக இருந்தது. அப்படிப்பட்ட பார்லிமெண்டு எதற்காக? ஜனத்துக்குச் செலவும், அங்கத்தினர்களுக்குச் சம்பள-மும் உண்டாக்குவதற்காகவா? வேண்டா, வேண்டா. அவஸ்தைக் காலத்தில், மக்கள்

நொந்திருக்கிற வேளையில், இந்த வீண் பேச்சுப் பேசுகிறவர்களின் கூட்டம் வேண்டா. ஹிட்லர் எல்லாக் கடமையையும் தம் தோளின்மேல் போட்டுக்கொண்டு, —எல்லா அதிகாரத்தையும் கேட்டுப் பெற்றார்.

"கலங்காது கண்ட வினைக்கண் துளங்காது
தூக்கம் கடிந்து செயல்." —திருக்குறள், 668.

ஹிட்லர் தம் தொண்டர்களிடத்தில் விசு-வாசமும் உறுதியும் உடைய சில நண்பர்-களை ஆலோசனைக்காரர்களாகத் தெரிந்து-கொண்டு, தேசத்தின் கேட்டை நிவர்த்-திக்கவும், தர்மத்தை அதிகரிக்கச் செய்ய-வும் பலமுள்ள முயற்சியில் தொடங்கினர்.

எல்லாக் கேடுகளிலும் பெரிய கேடு என்ன? வேலை இல்லாமையே. ஹிட்லர் முந்தித் தாம் வியன்னவில் ஒரு வேலைக்-காரராக உழைத்து, வேலையில்லாமல் போனவர். ஆகையால், அவர் ஏழைக்கு உண்டாகும் மனத்துயரம் இன்னது என்-

பதை அறிவர். அதிக காலம் வேலையில்லாமல் போன மனிதனுக்குத் தேகத்துக்கு மாத்திரமன்றி, மனத்துக்கும் கேடு வரும். அவன் தன்னை ஒன்றுக்கும் உதவாதவனாக எண்ணுவான்; நம்பிக்கையற்றவனாவான்; தோஷத்தின் வலையில் சிக்கிக்கொள்ளுவான்; அல்லது தற்கொலை செய்துகொள்ளுவான்.

ஹிட்லர் விடாமுயற்சி செய்தார். அதுவரையில் வேலையற்றிருந்தவர்கள், ஊர்ப் பொக்கிஷத்திலிருந்து ஏதாவது கொஞ்சம் உபகாரம் பெற்றார்கள். ஆயினும், அதனால் எல்லா ஊர்களுக்கும் அளவிறந்த கடன் உண்டாயிற்று. ஓர் ஊரில் அரை அல்லது முக்கால் பகுதி மக்கள், தாங்களே வரி கொடாமல், ஊரின் பணத்தை உபகாரமாக அல்லது பிச்சையாக வாங்கினால், ஓர் ஊர் செழிப்பது எப்படி? கடைசியில் வரி கொடுக்க ஒருவனுக்கும் சக்தி இல்லை. அதனால், அது நிறுத்தப்பட்டது. ஹிட்லர்



[Photo by Bittner.]

மோட்டார்கார் மட்டும் ஓடும் பெரிய புதுப் பாதை செய்தல்.

ஏவ, இப்போது உபகாரத்தைப் பிச்சை-யாக வாங்க மாட்டாமல் ஆசாமிகள் அதற்-காகப் பொது நன்மைக்குப் பிரயோசன-மாகும் ஒரு வேலை செய்ய ஆயத்தமாயிருந்-தார்கள். பிறகு கொஞ்சம் அதிகம் கொடுக்க முயன்றது. ஹிட்லர் அப்போது பெரிய பொது வேலைகள் செய்ய ஏவினார். வாய்க்கால்கள் வெட்டப்பட்டன. மோட்-டார் மார்க்கங்கள் துவக்கப்பட்டன. மின்-சாரம் குறைந்த விலைக்குக் கிடைக்கும்படி மின்சாரம் உண்டாக்குதற்கு வேண்டிய நீரைத் தேக்கப் பெரிய அணைக்கட்டுகள் கட்டப்பட்டன. மக்கள் பாழ் நிலங்களை நல்ல வயலாகச் செய்ய ஏவப்பட்டார்கள். வேலையில்லாத காலம் முக்கியமாய் வாலி-பருக்கே பொல்லாத காலம். ஏன்? வாலி-பர்கள் நல்ல கஷ்டமான வேலையில் பழக்-கப்படுவதில்லை; சோம்பேறித்தனத்துக்-கும் துன்மார்க்கங்களுக்கும் பழக்கப்படு-வார்கள். அஃது ஆத்துமாவுக்கு ஆபத்தாக

முடியும். ஐயோ! பாவம்! ஹிட்லர் அவர்களை அழைத்துச் சேர்த்து, அவர்கள் பயன்படுபவர்கள் ஆகும்படி கூலியின்றித் தேசத்தின் ஊழியத்துக்காக ஏதேனு-மொரு வேலை செய்தற்கு அவர்களைச் சம்-மதிக்கச் செய்தார். அவர்கள் **போது வேலைக்கு உமேத்வார்** தோழராகக் கூடினர். குல்லாவில் ஒரு மண் வெட்டிப் படம் அவர்களுடைய தொழிலுக்கு அறிகுறி-யாக அமைக்கப்பட்டது. இப்பொழுது அவர்கள் மண் வெட்டியையோ, கோடரி-யையோ, அரிவாளையோ தோளின்மேல் வைத்துச் சூரியோதயத்தில் களிப்பான பாடல்களைப் பாடிக்கொண்டு வெளியே அணி அணியாய்ச் செல்லுகிறார்கள்; காட்டின வேலையைக் கையினால் செய்து முடித்துத் திரும்பி, அப்புறம் தேகாப்பி-யாசத்துக்கு உதைபந்து முதலியவை விளையாடுதலிலும், படித்தலிலும், பாடு-வதிலும் காலங் கழித்து வருகிறார்கள்.



[Photo by Presse-Bild-Zentsale.]

‘பொது வேலைக்கு உமேத்வர்’ சேற்றில் நின்று வாய்க்கால் வெட்டுகின்றனர்.

எல்லாருக்கும் ஒரே சாப்பாடு; ஒரே சயனம். இப்போது சர்வ கலாசாலைகளின் மாணுக்கர் எல்லாரும் யாதொரு வித்தியாசமுமின்றி இந்த வேலையில் ஒரு வருஷம் பழக வேண்டும். அவர்கள் கைத்தொழிலின் கஷ்டத்தையும் பெருமையையும் அனுபவத்தினல் அறிந்துகொண்டு, தாங்கள் ஒரே வகுப்பின் கூட்டாளிகளென்று உணர்ந்துகொள்ளுவது நலமாம். பிரபுவின் குமாரனும் கூலிக்காரன் பையனேடு மண் வெட்டியினல் கைத்தொழில் செய்கிருன். "எல்லாரும் ஒரே இரத்தத்தின் புத்திரர்; ஒரே பெரிய தாயாரின் வயிற்றுப் பிள்ளைகள்," என்னும் கொள்கை முதிர்ந்து வருகிறது.

இப்படி இந்தியாவிலுள்ள வாலிபர்கள் தங்கள் தேசத்துக்கும் சமூகத்துக்கும் ஊழியம் செய்யக் கூடாதா? சில ஆயிர வருஷ காலமாக யாதொரு கைத்தொழிலும் செய்யாமல் இருந்து வந்த உயர்ந்த

குலத்தில் பிறந்தவர்கள், தேகாப்பியாசத்-
துக்கு இப்படிச் செய்தல் நல்லதல்லவா? தாழ்ந்த மக்கள் அவர்களோடு ஒரே வேலையில் சேர்ந்து உழைத்தால், ஓர் ஊழியத்தில் கையிட்டால், அவர்கள் உயர்த்தப்படமாட்டார்களா? அதனல் தீண்டாமையை வெல்லக் கூடாதா? அஃது ஒரு வகைக் கிராமப் புனருத்தாரணமும் ஆகும் அல்லவா? மாணவிகளுக்குங்கூட, அவர்களுக்குத் தகுந்தபடி, ஒரு வருஷம் தொழிற் பயிற்சி அளிக்க வேண்டும்.

ஹிட்லர் வியன்னவில் வேலை செய்யும் போது தொழிலாளிகளோடு பழகுவதில் பல விதமான துன்பங்களை அடைந்தார் என்று முன்னமே உரைத்தோம். ஹிட்லர் அந்த ஆட்களின்மீது பெரிய குற்றம் சாட்டுகிறதில்லை. அவர்கள் சுபாவத்தில் கபடற்ற நல்ல மனிதர்களென்பதை அவர் அறிந்தார். ஆயினும், அவர்கள் புத்தியும் மனமும் மார்க்ஸ் செய்த கள்ள போதனை-



மோட்டர்கார் மட்டும் போகவும் வரவும் தனித்தனி பாதைகள் நாட்டின் பல திசைகளிலும் ஏற்படுத்தப்பட்டுத் திறப்பு விழா நாளில் முதல் காரில் சென்ற ஹிட்லரை வாழ்த்த எண்ணற்றவர்கள் பாதை ஓரத்தில் காத்திருத்தல். வேலை செய்த தொழிலாளர் பின் வண்டிகளில் ஹிட்லரைத் தொடர்ந்து செல்லுதல்.
[Orbis-Photo.]

யினல் முழுவதும் கெடுக்கப்பட்டன. இந்தப் போதனையைப் பிரசங்கிக்கிற மார்க்ஸ் சீஷர்கள் ஒரு வகுப்பு ஜனங்களை மற்ற வகுப்புக்கு விரோதமாகவும், வேலை வாங்குவோரை வேலை கொடுப்போருக்கு விரோதமாகவும், பொது மக்களை அரசாங்கத்துக்கு விரோதமாகவும் எழுப்பவும், கோபமும் பகையும் கலகமும் உண்டாக்கவும் கெட்டிக்காரர்களாய், அதில் சந்தோஷப்பட்டார்கள்; பத்திரிகைகளையும் புஸ்தகங்களையும் பிரசுரித்துத் தொழிலாளர் அவைகளைக் கோடிக் கணக்காக வாங்கச் செய்து, பணம் சேர்த்துப் பட்டினங்களில் நல்ல மாளிகைகளில் இனிது வாழ்ந்து வந்தார்கள். ஒருவன் பொருளைத் தனக்கு உரிமையாக்கிக்கொள்வது கூடாது. பொருளுடைமை களவுக்குச் சரி என்று போதித்தார்கள். இப்படியிருக்க, பொது உடைமைக் கட்சித் தலைவனான ஒருவன், பர்லீனில்*

*Berlin

தன் பொல்லாத பத்திரிகையினுல் நன்ருய்ச் சம்பாதித்து, ஒரு விஸ்தாரமான மாளிகையில் வசித்து வந்தான். ஐசுவரியம் தனக்குச் சொந்தமான பின் அது திருட்டுக்குச் சமம் அன்று என்கிருன் போலத் தோன்றுகிறது. ஓர் இரவில் சில திருடர் உட்புகுந்து களவு செய்து உயர்ந்த விலை பெற்ற நகைகளையும் பணத்தையும் திருடிப் போனர்கள். மற்ற வீடுகளில் கத்தி, புஸ்தகம், பென்சில் முதலிய அற்பப் பொருள்கள் மேசையில் கிடக்கிறது போல அந்தப் பொது உடைமைக் கட்சித் தலைவன் மாளிகையில் ஆபரணங்களும், பணமும் கிடந்தன. அப்படியானல், இருப்புப் பெட்டியிலும் பாங்குகளிலும்* இன்னும் எவ்வளவு குவிந்திருக்கும்? பொருள் உடைமையைக் கள்ளத்தனமாகக் கருதும் பொது உடைமைக் கட்சித் தலைவன் அப்பொழுது என்ன செய்தான்? 'போனல் போகட்டும்!'

*Banks

என்று நினைக்காமல், தினந்தோறும் பத்திரிகையில் தான் தூஷித்துச் சபித்து வந்த போலீஸாரை அழைத்து, "இந்தப் பொல்லாத திருடரைத் துப்புப் பார்த்துக் கண்டு பிடித்துத் தண்டிக்க வேண்டும்," என்று கூறினான்.

இப்படிப்பட்டவர்கள் கபடமற்ற ஜெர்மன் தொழிலாளிகளின் மனத்தைக் கெடுத்தார்கள்; அவர்களை விடாமல் வேலை நிறுத்தலுக்கும் கலகத்துக்கும் தூண்டி விட்டார்கள். போலீஸாரோடும் சிப்பாய்களோடும் பின்பு சண்டை நேர்ந்த போது, அவர்கள் பதுங்கி, மறைவாகத் தங்கள் மாளிகைகளில் உட்கார்ந்திருக்கவே, தொழிலாளிகள் தெருக்களில் தங்கள் இரத்தத்தைச் சிந்தும்படி அடிக்கப்பட்டார்கள். திரும்பத் திரும்ப இப்படி நேர்ந்தது. அவர்கள் தொழிலாளிகளுக்கு உண்மையான நல்ல நண்பர்கள் ஆவார்களா? ஹிட்லர் அதை ஊகித்தறிந்து, "தொழிலாளர்கள்

சுபாவத்தில் குற்றமுள்ளவர்கள் அல்ல; அவர்களும் ஜெர்மன் ஜனங்களில் மற்றவர்களைப் போலக் கபடற்ற யோக்கியர்களே. தங்கள் தலைவர்களைப்பற்றி அவர்களுக்குத் தெரிவிக்க வேண்டும்,'' என்று நினைத்து, “ நண்பர்களே, இதுமட்டும் உங்களுக்கு வழி காட்டுகிறவர்களை உற்றுப் பாருங்கள். அவர்கள் தங்கள் சொந்த நன்மையைத் தேடுவதல்லாமல், உங்கள் சுகத்தையும் நன்மையையும் தேடுவதில்லையே! ஒரே சமூகத்தில் ஒரு வகுப்பு மற்ற வகுப்புக்கு விரோதமாக என்றென்றைக்கும் போராட வேண்டும் என்று மார்க்ஸ் சொன்னதில் உங்கள் சுகம் அடங்குமா? வேலை வாங்குகிறவருக்கும் வேலை கொடுக்கிறவருக்கும் ஒற்றுமை இருந்தால், அஃது உங்களுக்கு ஒரு நன்மையாகாதா? நீங்கள் மற்றவர் ஏவுதலினால்—கலகத்தால்—உங்கள் தேசத்தின் வல்லமையை அழித்தால், அஃது உங்கள்

பிள்ளைகளுக்கு நன்மை ஆகுமா?" என்று சொல்லிக்கொண்டு வந்ததனால், வர வர அநேக தொழிலாளிகள், முந்தி வழி காட்டினவரை விட்டுவிட்டு, ஹிட்லருடன் சேர்ந்துகொண்டார்கள்.

## 10. வேலைக்காரன் மாட்சிமைத்தினக் கொண்டாட்டம்

இதோ பாருங்கள்! என்ன மாறுதல்! மே மாதத்தின் முதல் தேதி கம்யூனிஸ்து அல்லது சிகப்புக் கட்சியார்களுக்கு ஒரு பெரிய நாள் என்பது தெரிந்த விஷயம். அந்நாளில் தங்கள் தலைவர்களால் தொழிலாளிகள் வேலையைவிட்டு நீங்கிச் சொல்ல முடியாத வார்த்தைகளாலும் தூஷணைகளாலும் நிறைந்த பிரசங்கங்களைக் கேட்கவும், தெருக்களிலும் மைதானங்களிலும் சிகப்புக் கொடிகளைக் காட்டவும், இழிவான தூஷணைப் பாட்டுகளை உரத்துப் பாடவும் அழைக்கப்பட்டார்கள். அடிக்கடி பயங்கரமான கலகமும் நடந்தது. பலர் காயப்படுத்தப்பட்டனர். சிலர் கொன்று போடப்பட்டனர். அதனால், இந்தச் சிகப்பு நாள் ஜெர்மனியிலும் மற்றத் தேசங்களி-



ஜெர்மனித் தொழிலாளர் நாளாகிய மேமீ 1உ இரவில் நடைபெறும் பேரொளி விளக்கு (Torch-light) ஊர்வலம் பர்லீன் பிரதான ஆலயத்தின் முன் செல்லுதல்.

[Orbis-Photo]

லும் சனியனய் வந்து சென்றது. இப்போது ஹிட்லருடைய முயற்சியினல் அது களிப்பு நாளாக மாறிற்று. வேலைக்காரர் ஹிட்லருடைய வார்த்தையைக் கேட்டு நம்பி மூந்தின தலைவர்களை விட்டு நற்புத்தி அடைந்த பிறகு, ஹிட்லரும் அவர்களுக்கு நல்ல மரியாதை காட்டிச் சகாயம் செய்திருக்கிருர். அவர் முதலாளிகளையும், உயர்ந்த வகுப்போரையும், கற்ருேரையும் பார்த்து, "தொழிலாளிகள் உங்களுக்கு உதவி செய்வது போல, நீங்களும் தொழிலாளிகளுக்கு உதவி செய்யுங்கள். மக்கள் ஒற்றுமைப்பட்டு, பல வகுப்புகளாகப் பிரிக்கப்படாத ஒரே சமூகமாகச் சேர்வதற்கு இதுவே தக்க சமயம். நாம் எல்லோரும் எல்லா வகுப்பினரின் முயற்சியிலும் வேலையினலும் பிழைக்கிருேம். உயர்ந்தோர் தாழ்ந்தோர் என்று சொல்வது குற்றம் ஆகும். எல்லா உலகமும் நமக்கு எவ்வளவு விரோதமாக நின்ருலும்,

5

அவ்வளவு அதிகமாக நாமும் ஒற்றுமைப்பட்டு நிற்க வேண்டும். இந்த உலகத்தில் எப்பொருளும் சொந்த முயற்சியினல் கிடைப்பதன்றி, முயற்சி இல்லாமல் ஒன்றும் கிடைப்பதில்லை. ஜீவிக்க விரும்புவோன் விடாமுயற்சி செய்ய வேண்டும். விடாப் போர்க்கு இடமாகிய இவ்வுலகத்தில் போராட மனமில்லாதவன், ஜீவிக்கத் தக்கவன் அல்லன்,'' என்று கூறினர். இப்போது அவர் ஏவலால் மே மாதம் முதல் தேதி தேசத்தில் எங்கும் வேலைக்காரருடைய மாட்சிமை நாளாகக் கொண்டாடப்படுகிறது. எங்கே பார்த்தாலுங் களிப்பு! பல விதமான வாத்தியங்கள் முழங்க இப்போது வேலைக்காரர்கள் மாத்திரமன்றி, வேலை வாங்குகிறவரோடு வேலை கொடுக்கிறவரும் கலந்து மைதானத்துக்குச் சென்று, வேலை நாளைக் கொண்டாடுகின்றனர். இப்போது இந்த நாளில் இழிவான பாட்டுகள் கேட்கப்படுவது இல்லை;

உள் நாட்டில் சண்டைக்குத் தூண்டுகிற பிரசங்கம் நடப்பது இல்லை. கலகம் காணப்படுவது இல்லை. கொலை செய்யப்படுபவரும் இல்லை. பள்ளிக்கூடங்களிலும் எல்லாப் பிள்ளைகளும் கை வேலையின் மாட்சிமையைப் பற்றி உபதேசிக்கப்படுகின்றார்கள். ஜெர்மனியில் இந்தச் சிகப்பு நாள், வேலைக்காரருடைய மாட்சிமை நாளாக மாறி, கலகமில்லாமல் ஆயுதம் தாங்காத மக்களின் பெரிய கூட்டங்களால் களிப்புடன் கொண்டாடப்படுகையில்—தங்களைப் போரைப் பகைக்கிறவர்கள் என்றும், அஹிம்சையையும் சமாதானத்தையும் விரும்புகிறவர்களென்றும் சொல்லிக்கொண்ட கம்யூனிஸ்து கட்சியார் தேசத்தில் எப்படிக் கொண்டாடப்படும்? வேலையின் நாள் போர் நாளாக மாறிற்று. ஆயுதம் இல்லாத வேலைக்காரர்களுக்குப் பதிலாகச் சிப்பாய்கள் பல இலட்சக் கணக்காகத் துப்பாக்கிகளோடும் எண்ணிறந்த பெரிய

பீரங்கிகளோடும் யுத்த எந்திரங்களோடும் அதிகாரிகளுக்கு முன்பாகச் செல்லுகிறார்கள். நடக்கும் கோட்டைகள் போன்ற பெரிய பீரங்கிகள் கொண்ட **டாங்குகள்** * பெரிய தொனியோடு வேகமாய்த் தெருக்களில் ஓடுகின்றன. ஆகாயத்தில் பல்லாயிரக் கணக்கான **பாம்** † எறியும் விமானங்கள் பறக்கின்றன. கடைசிச் சிகப்பு நாளில் இராணுவத் தேர்ச்சி அடைந்திருந்த பெண் பிள்ளைகளுங்கூடச் சிப்பாய்களாக ஆயுதங்களோடு தோன்றினார்கள். (அஃது எண்ணிறந்த ஆண் சிப்பாய்கள் உள்ள ஒரு தேசத்தில்!) போரைப் பகைக்கிற கம்யூனிஸ்துகளால் ஆளப்படுகிற ருஷியாவில் வேலைக்காரன் நாள் இப்படியே கொண்டாடப்படுவதாயிற்று.

---

* Tanks † Bomb

## 11. நல்ல பிரசங்கம்

ஹிட்லர் வேலையற்ற அநேகருக்கு வேலை கொடுத்த போதிலும் துயரம் முக்கியமாய்க் குளிர் காலத்தில் இன்னும் அதிகம் ஆயி-னும், அவர் முயற்சியில் குறையவில்லை. அவர் எல்லா வகுப்பாரையும் பார்த்து, "நாம் எல்லாரும் ஒரே சரீரத்தின் உறுப்பு-கள்; ஒரே தாயாரின் பிள்ளைகள். நாம் குளிரால் வருத்தப்படுகிறவர்களின் துன்-பத்தையும் வேலையில்லாமல் பசியால் வருந்துபவரின் ஆபத்தையும் தீர்க்க வேண்-டும். நம்மில் ஒரு சகோதரனும் குறை-வினால் செத்துப் போகச் சகித்தல் கூடாது. வேலையும், சொத்தும், பொருளும், பணமும் உடையவர்கள், அவை தங்களுக்கு மட்டும் நலமாக இருக்கின்றனவென்று நினைக்கக் கூடாது," என்றார்.

அவர் முக்கியமாக வட்டியினாலும் இலாபத்தின் பாகங்களினாலும் * சீவனம் பண்ணுகிறவர்களைப் பார்த்து, " நீங்கள் ஏழைகளை மறந்து சுகமாய்ச் சீவிக்கும்படி பொது உடைமைக்காரர் செய்யப் போகிற புதிய புரட்சியைத் தடுக்க நாங்கள் இவ்வளவு காலம் விடாமுயற்சி செய்யவில்லை. இதற்காக அத்தனை தொண்டர்கள் தங்கள் சீவனை விட்டுப் போராடவுமில்லை. உங்களுக்கு இந்த நல்ல வாழ்க்கை மற்றவர்களுடைய கஷ்டத்தினாலேயே உண்டாகிறது. தான் சுகமாயிருக்க மற்றவர்கள் கஷ்டப்பட வேண்டும் என்று நினைத்துக் கேட்பது ஒருவனுக்கும் நியாயம் அன்று. ஒரு சமூகம் எதனால் வாழ்கிறது? அரசாங்கத்தாருடைய கைவேலையினாலன்று; உயர்ந்த வகுப்பின் உழைப்பினாலன்று; கற்றோருடைய புத்தியினால் மட்டும் அன்று. எல்லா வகுப்பினருடைய பொதுவான விவாதமற்ற

* Interest in shares and bonds

வேலையினாலேதான் சமூகம் சீவிக்கிறது. வேலையின் மாதிரியினாலே அந்த வேலை செய்கிறவனுடைய மானத்தை அறியலாம் என்று அநேகர் நினைப்பது பெரும்பிசகு. நம்மில் கோடிக் கணக்கான மக்கள் தங்கள் வாழ் நாள் முழுவதும் கவலைப்பட்டு நல்ல சீவனத்தை அடையாமல், விசுவாசத்தோடு வேலை செய்துகொண்டே இருக்கிறார்கள். அதனாலேதான் நாம் அவர்களை மதித்துச் சிநேகிக்க வேண்டும். அவர்களுடைய உதவியில்லாமல் மற்றவர்கள் உயர்ந்த நிலைமை அடைந்திருப்பார்களா? ஆஸ்தியினால் மட்டும் மனிதனுடைய மானத்தை அளவு செய்ய ஒரு சமூகத்தார் பழகிவிட்டால், அந்தச் சமூகம் குலைந்து பாழாகுமே! கையினாலே வேலை செய்வது, தாழ்ந்த வேலையானாலும், ஒருவனுடைய மானத்தைக் குறைப்பதில்லை. ஒருவன் எந்த மாதிரி வேலை செய்தாலும் சரி— யோக்கியமும் விசுவாசமும் உள்ள மனத்-

தோடு செய்தால்தான் அவ்வேலை பெருமை தரும்,'' என்றார்.

இப்படியே அவர் வேலைக்காரனை மதித்துப் பொருளுடையவருக்கு நல்ல புத்தியைச் சொன்னார். இப்படி நினைப்பது உத்தமமான சமூக நலந்தான். இதனாலேதான் இக்கட்சி தன்னைச் சோஷலிஸ்து கட்சி எனச் சொல்லுகிறது. சொந்தத் தேசத்தையும் ஜனத்தையும் நேசித்து அவற்றைச் சீவனால் காப்பாற்றுதற்கு உறுதி கொண்டவர்களாதலால், தங்களை **நேஷனல்*** என்று சொல்லுகிறார்கள். அது சேர்ந்து **நேஷனல் சோஷியலிஸம்**† என்று பெயர் ஆகும். சிலர் சுருக்கமாய் **நாஜி** என்றால், அதற்குத் தவறில்லை. அதுவும் கௌரவமுள்ள பெயரே. அப்படியானால், மற்றத் தேசங்களில், (இந்தியாவிலுங்கூட) ஹிட்லரை அவ்வளவு பகைத்துத் தூஷிப்பதற்-

---

* National

† National Socialism

குக் காரணம் விளங்கவில்லை. அவர் ஜன நாயகத்தை இத்தேசத்தில் அழித்ததனலா? ஜன நாயகத்தால் இதுமட்டும் ஒருவனுடைய வயிற்றுப் பசி தீர்ந்ததா? ஹிட்லரே அப்பசியைத் தீர்த்தார். மேலும், அவர் ஜன நாயகத்தை அழித்தாரா? தேசத்தில் 370 இலட்சம் பெயர் (ஓட்டு உடையவர் நூற்றில் தொண்ணூறு பெயர்) அவருக்குத் தேர்தலினல் அதிகாரத்தை ஒப்புக்கொடுத்தனர். அது ஜன நாயகம் அல்லவா? எந்த ஜன நாயகத் தேசத்தில் இப்படி இருக்கிறது? எப்படியாளுலும், அவருடைய மேல் சொன்ன யோசனையினல் வேலையில்லாமல் துயரப்படுகிறவர்களுக்கு உதவி வந்தது.

## 12. குளிர் கால உபசார இயக்கம்

ஹிட்லர் குளிர் கால உபசார இயக்கத்தை ஸ்தாபித்தார். அவர் தூண்டுதலால் ஜனங்கள் எல்லோரும் திக்கற்றவருக்கு வேண்டியதைக் கொடுத்தார்கள். கூலிச் சம்பளம் வாங்குவோர்கள் தங்கள் வருமானத்தில் ஒரு சிறிய பாகத்தை அதற்காகப் பிடித்துக்கொள்ளுதற்குச் சம்மதித்தார்கள். ஹிட்லர் அதிகாரத்துக்கு வருவதற்கு முன்னே ஜெர்மனியில் பெரிய உபத்திரவத்தினலும் பொல்லாத போதனைகளாலும் உண்டான தர்மக் கெடுதியினலும் குழந்தை பிறப்பின் தொகை குறைந்துகொண்டே போயிற்று. அவர் ஆளுகை செலுத்திய மூன்று வருஷங்களில் பிறப்பின் தொகை விருத்தி அடைந்தது. பிள்ளைகுட்டிக்காரருக்கு நலம் செய்ய அவர்

ஒரு சட்டம் செய்தார். அதாவது, வருமான வரி குழந்தையின் எண்ணிக்கைக்குத் தக்கபடி குறைந்துகொண்டே போவது. திருஷ்டாந்தமாக, (1) மாதத்தில் 140 ரூபாய் வருமானமுள்ள ஒரு பிரமசாரி $7\frac{1}{4}$ ரூபாயும், குழந்தையில்லாத கிருகஸ்தன் $3\frac{1}{4}$ ரூபாயும், ஒரு குழந்தையுள்ளவன் $\frac{3}{4}$ ரூபாயும் வரி செலுத்துவார்கள். இரண்டு குழந்தையுள்-ளவன் ஒன்றுஞ் செலுத்த வேண்டுவ-தில்லை. (2) மாதத்தில் 250 ரூபாய் வருமான-முள்ள பிரமசாரி 30 ரூபாயும், குழந்தை இல்லாதவன் $14\frac{1}{4}$ ரூபாயும், ஒரு பிள்ளை உள்ளவன் 11 ரூபாயும், இரண்டு பிள்ளை உள்ளவன் $7\frac{3}{4}$ ரூபாயும், 3 பிள்ளையுள்ளவன் $4\frac{1}{2}$ ரூபாயும் செலுத்துவார்கள். நான்கு பிள்ளையுடையவன் ஒன்றும் செலுத்த வேண்டுவதில்லை.

உபசாரப் பணம் சேர்ப்பதற்கு ஒவ்-வொரு கடையிலும் ஒரு தண்டல் பெட்டி வைத்தார்கள். செலவு செய்து பொருள்களை

வாங்கக் கூடியவர் வாங்கினல், ஒரு பைசா அல்லது ஓர் அணு அப்பெட்டியில் போடலாம். நாடகங்களும் விழாக்களும் நடத்தப்பட்டு, அவற்ருல் பெற்ற இலாபம் உபசாரத்துக்குப் பயன்படுத்தப்படும். ஒவ்வொரு மாதத்திலும் ஒரு ஞாயிற்றுக் கிழமை, ஒரே சட்டி ஞாயிற்றுக் கிழமை என்று வழங்கப்படுகிறது. அதாவது, அன்று பொருளுடையவர் நல்ல உயர்ந்த சாப்பாட்டுக்குப் பதிலாகக் குறைந்த செலவில் உணவு சமைப்பது வழக்கமாயிற்று. அதனல் மிகுந்த பணம் ஏழைகளுக்குப் பயன்படுத்தப்படும். ஹோட்டல்களில் சாப்பிடுகிறவர்களும் அதுபோலவே சாதாரணச் சாப்பாட்டுக்காக உயர்ந்த சாப்பாட்டின் விலையைக் கொடுப்பார்கள். அப்பணத்தில் மிச்சத்தை ஹோட்டல் சொந்தக்காரன் ஏழைகளின் உபசாரத்துக்கு அனுப்புவான். இதனலும் மற்ற முயற்சிகளாலும் உண்டாகும் பயன்

என்ன ? ஏழைகளுக்கு உபசாரம் உண்டானதல்லாமல், கொடுக்கிறவர்களுக்குச் சகோதரரை மறவாமையாகிய நல்ல படிப்பும் உண்டாகிறது. யுத்தத்தினுலும் வர்செல்ஸ் ஏற்பாட்டினுலும் மிகவும் தரித்திரமடைந்த தேசத்தில் இந்த இயக்கத்தினுல் வருஷத்தில் பணத்திஞலும், தானியம், வஸ்திரம், சாப்பாடு, ரொட்டி, முட்டை, மாமிசம், கிழங்கு, விறகு முதலியவைகளாலும் 36 கோடி மார்க்குகள் மொத்தமாக நன்கொடைகள் கிடைத்தன. இதுதான் உண்மையான **சோஷியலிஸ்ம்.** பிரயோசனம் உள்ள ஜன நாயகம் இதுவே. உலகத்தில் எந்தத் தேசத்தில் இப்படி நேரிட்டது ?

ஹிட்லரின் ஆட்சியினுல் தொழிலாளருக்கு இன்னும் பல நன்மைகள் உண்டாயின. அவர்கள் தங்கள் மனைவி மக்களுடன் வாசம் செய்யும் அநேக வீடுகள் பழுது பார்க்கப்பட்டதுடன், பல புதியவைகளாகவும் கட்டப்பட்டன. அவர்கள் தொழிற்-

சாலைகளில் வேலை செய்யும் அறைகள் சுகாதார முறைக்கு ஏற்றபடியும் சுற்றிலும் அழகாயிருக்கும்படியும் பார்வையிடப்படுகின்றன. வேலை முடிந்த பிறகு தொழிலாளிகள் பொருளுடையவர்களைப்போலச் சில சமயங்களில் நாடகம் சினிமா முதலியவை பார்ப்பதற்கு ஒரு சங்கம் ஸ்தாபிக்கப்பட்டது. அதன் பெயர் **சந்தோஷத்தினல் பலன்** என்பது. இந்தப் பெயர் அற்புதமாய்த் தோன்றுகிறது. இதன் அர்த்தம் என்னவென்றால், 'தொழிலாளிக்கும் மற்ற மனுஷனைப்போலச் சந்தோஷம் அவசியம். துக்கத்தினல் அல்ல, சந்தோஷத்தினல் மனிதனுக்குச் சுகமும் தைரியமும் பலமும் உண்டாகும். தொழிலாளிக்கும் அவற்றில் தனக்குரிய பாகம் கிடைக்க வேண்டும்,' என்பது. அந்தச் சங்கத்தின் முயற்சியினல் தொழிலாளி விடுமுறைக் காலத்தில் மிகவும் சிறிய தொகையில் தன் குடும்பத்தோடு சுகத்துக்கு வேண்டிய இடத்துக்குப்

போக ஏற்பாடு செய்யப்படும். தொழிலாளிகள் நல்ல புகைக் கப்பலிலுங்கூட மற்றத் தேசங்களைப் பார்வையிடுவதற்கு விநோதமான பிரயாணம் செய்கிறார்கள். மற்றத் தேசங்களில் தொழிலாளர் கட்சியின் பத்திரிகைகள் ஹிட்லரையும் நாஜி ஆட்சியையும் தூஷித்துக்கொண்டே இருக்கின்றன. அத்தேசங்களில் தொழிலாளிகள் இப்படிப் பிரயாணம் செய்கிறார்களா ?

தம் சொந்தத் தேசத்தில் தம்மைக் கண்டித்துக் கத்தியவர்களைப் பற்றி ஹிட்லர் ஒரு முறை பின் வருமாறு சொன்னார் : " எல்லாரும் வேலை கேட்பது நியாயந்தான். நாங்கள்(அரசாங்கத்தார்கள்)அவர்களுக்கு வேலை கிடைக்கும்படி விடா முயற்சி செய்ய வேண்டும். இக்காலத்தின் திண்டாட்டம் முந்தின எல்லாக் காலங்களையும்விட மிகவும் பெரியதே. இப்படிப்பட்ட திண்டாட்டத்தை மேற்கொள்ள எக்காலத்-

திலும் எவனும் நமக்கு வழி காட்டினதில்லை. நாமே வழி தேட வேண்டும். அவ்வழியிலே நாம் இங்கும் அங்கும் சிறிது தப்பிப் போவது இயல்புதான். நாங்கள் வழி தப்பாத தேவர்கள் அல்ல; தப்பிப் போகக் கூடிய மனிதர்களே. ஆயினும், எங்கள் பிசகுகளை மாத்திரம் பார்த்துக் கண்டித்துக் கத்துகிறவர்களை நாங்கள் கொண்டாட மாட்டோம்; அவர்கள் கத்துதலைச் சகிக்கவுமாட்டோம். கண்டித்துக் கத்துகிறவர் இருந்தாலும், இராவிட்டாலும் என்ன? ஜனங்கள் அவர்களின் கத்துதலினல் பாழாய்ப் போவதை நாங்கள் தடுக்கிறவர்கள்தான். ஜனங்கள் மட்டும் சுகமாய் ஜீவித்தால் போதும்.''

## 13. வேளாண்மையே மேலானது.

"உழுவார் உலகத்தார்க்கு ஆணி; அஃது ஆற்ருது
எழுவாரை எல்லாம் பொறுத்து."

—திருக்குறள், 1032.

"எல்லாக் கலைகளிலும் மேலானது வேளாண்மைதான். அதுவின்றி வர்த்தகரும், கவி ராயரும், ஞானிகளுமில்லை," என்று பிரஷியாவின் மன்னராகிய பிரேட்ரிக்கு என்னும் பெரியவர் * சொல்லி இருக்கிருர்.

ஜெர்மனியில் புரட்சியினுல் அதிகாரத்தை அபகரித்துக்கொண்டவர் இதன் உண்மையைத் தெரிந்துகொள்ளவில்லை. காலம் செல்லச் செல்ல, அவர்களுடைய ஆளுகையில் ஏறக்குறைய எல்லாம் கெட்டுப் போயின. அப்படியிருக்க, கிராமமும் வேளாண்மையும் செழிக்குமா? கிராமங்-

* Frederick the Great

களில் உழைத்து வந்த குடியானவர்கள், கடனுகிய கடலில் மூழ்கித் தங்கள் தங்கள் வீடு நிலங்களை ஈடு கொடுத்துக் கடன் வாங்க அவஸ்தைப்பட்டார்கள். அக்-காலத்தின் அரசாங்கத்தார் அதைப்பற்றிக் கவலைப்படவில்லை. அவர்கள் பெரிய பட்-டினங்களில் இருக்கும் தொழிலாளர் திரளை மாத்திரம் கவனித்து, அவர்களுக்காக மட்-டும் கவலைப்பட்டார்கள். ஏன் ? அவர்கள் தொழிலாளிகளுடைய கட்சிக்குப் பயந்து, அவர்களைக் கவனியாவிட்டால் அவர்கள் தங்களுக்கு அடுத்த தேர்தலில் மறுபடியும் ஓட்டுக் கொடுக்க மாட்டார்களென்றும், அதனல் தங்கள் அதிகாரம் அடியற்ற மரம்போலக் கீழே விழுந்துவிடுமென்றும் திகைப்புக் கொண்டார்கள். மேலும், யுத்-தத்தில் உத்தமமான வீரராய்ப் போராடின குடியானவர்களுக்குப் புரட்சியில் மன-மில்லை என்றும், அதைச் செய்வாரின்மேல் அன்பு இல்லை என்றும் அறிந்தார்கள்.

ஆகவே, குடியானவன் கெட்டுப்போனால் என்ன? அவர்கள் வெளி நாட்டிலிருந்து விலை குறைந்த தானியங்களையும் மாமிசத்-தையும் இறக்குமதி செய்தார்கள். சுதே-சத்தின் குடியானவனுக்குப் பயிர் செய்த தானியங்களை விற்க வழி இல்லை. குடியா-னவர்கள் சொந்த சீவனத்துக்கும் வரி வட்டிக்கும் போதுமானதைச் சம்பாதிக்க இயலவில்லை. வரி வட்டி கொடுக்கச் சக்தி இல்லாதவரிடத்தில் போலீஸாரைத் துணை கொண்டு ஏலம் போடுவோன் வந்து வீடு, மாடு, நிலம் எல்லாவற்றையும் ஏலம் போட்டுக் குறைந்த விலைக்கு விற்றான். ஊரார், "இப்படிப்பட்ட ஏலங்களில் நாங்-கள் பொருள்களை வாங்கச் சம்மதிக்க மாட்டோம்," என்பவர்களைப் போல மௌனமாய் நின்றுவிட்டார்கள். அஃது ஒரு வித அஹிம்ஸை இயக்கம். ஆகவே, பத்து ஏர் உடைய குடியானவர் பலர், ஒன்றுமில்லாத தரித்திரர் ஆயினர்; கிரா-

மத்தை விட்டுப் பட்டினங்களில் வேலை தேடப் போய் அகப்படாமல் வேலையற்றவர்களின் திரளில் மூழ்கினர். கிராமம் பாழாய்ப் போயிற்று.

"உழவினார் கைம்மடங்கின் இல்லை, விழைவதூஉம்
விட்டேமென் பார்க்கு நிலை."—திருக்குறள், 1036.

ஹிட்லர் அதைப் பார்த்து, "இஃது என்ன பைத்தியம்! இஃது ஒரே சரீரத்தில் உள்ள அவயவங்கள் ஒன்றோடொன்று விரோதப்பட்டுப் போர் செய்வது போல ஆகுமே! வேளாண்மை தேசத்தில் வேண்டாவா? ஒரு வகுப்பு மற்றொரு வகுப்பை ஆதரிக்க வேண்டுவது அவசியமல்லவா?" என்றார்.

"சுழன்றும்ஏர்ப் பின்னது உலகம்; அதனால்
உழந்தும் உழவே தலை." —திருக்குறள், 1031.

ஒரு சமூகம் பயிர்த் தொழிலை விடலாமா? எல்லாத் தொழில்களையும் விட்டுவிட்டாலும், பயிர்த் தொழிலை விட்டுவிடக் கூடாது. அஃது இன்றியமையாதது. குடித்தனம்

எல்லாத் தொழில்களுக்கும் தர்மங்களுக்கும் மூலம். கிராமம் பட்டினத்துக்குத் தாய்.

"இரவார் இரப்பார்க்கொன்று ஈவார் கரவாது
கைசெய்தூண் மாலை யவர்." —திருக்குறள், 1035.

பயிர்த் தொழில் கெட்டுப் போனல், சமூக முழுவதும் பாழாகும். எல்லாத் தொழில்களும் பட்டினத்தில் கெட்டுப் போனலும், கிராமத்திலிருந்து எல்லா-வற்றையும் புதுப்பிக்க முடியும்.

"பலகுடை நீழலும் தம்குடைக்கீழ்க் காண்பர்
அலகுடை நீழ லவர்." —திருக்குறள், 1034.

குடியானவனைத் தொழிலாளனுக மாற்ற-லாம். தொழிலாளியைக் குடியானவனுக மாற்ற இயலாது. குடித்தனம் சமூகத்தின் மூலமாதலால், குடியானவனை இரட்சிக்க வேண்டும் என்று ஹிட்லர் நினைத்தார்.

அதனல், அவர் அதிகாரத்துக்கு வந்த பிறகு ஒரு சட்டம் செய்தார். அதாவது, "கடனுக்காக ஒரு குடியானவனுடைய வீடு

நிலங்களை ஏலம் போட்டு விற்கக் கூடாது. வீட்டுக்காரன் தன் வீடு நிலங்களைத் தானும் விற்கக் கூடாது. அவன் காலம் சென்றால், பிள்ளைகளில் எவன் பயிர்த் தொழிலுக்குத் தக்கவனோ, அவனுக்கு ஒப்புவிக்க வேண்டும். சொந்தப்பிள்ளை இல்லாவிட்டால், அவன் ஒரு பிள்ளையை ஸ்வீகாரம் செய்துகொள்ள வேண்டும்,'' என்பதாம்.

இதுமிகவும் நல்ல சட்டம். ஆயினும், ஒரு வீட்டுக்காரன் நல்ல பயிர்த் தொழிலைச் செய்யாமல் தன் வேலையை அசட்டை பண்ணித் தாராளமாய்க் கடன் வாங்கினால், பின் கடன் கொடுக்கிறவன் பணத்தை இழந்து போக வேண்டுமா? இல்லை. கடன்காரன் தன் பூஸ்திதியின் அதிகாரத்தை இழந்து போக வேண்டும். அவனுக்குச் சீவனத்துக்கு மட்டும் சிறிது பொருள் கொடுக்கப்படும். நிலங்களின் விளைவினால் கடன் தீருமட்டும் ஆஸ்தியைத் தன் ஸ்வாதீனத்தில் வைத்துக்கொள்ளும்படி ஒரு

யோக்கியன்* நியமிக்கப்படுவான். கடன் தீர்ந்ததும், பூஸ்திதி கடன்காரனுடைய பிள்ளைக்கு அல்லது பேரப் பிள்ளைக்கு ஒப்புவிக்கப்படும். கடன்காரன் தன் மானத்தை இழந்துவிட்டிருப்பான். அதிலே நியாயம் என்ன? ஒரு சமூகத்துக்கு இருக்கிற பூமி ஒரு மனிதனுக்குச் சொந்தமானது அன்று; அது சமூகத்துக்கு உரியது. அஃது ஒருவனுக்கு நல்ல உபயோகத்துக்கு மட்டும் ஒப்புக்கொடுக்கப்பட்டது. கிராமம் பாழ் ஆகாதபடி காப்பதற்கு அது நல்ல சட்டமே. அதற்கு முன் கடன் கொடுத்தவர்கள் (பெரும்பாலோர் யூதர்கள்), யாதொரு கை வேலையும் செய்யாமல், உழைக்காமல், உயர்ந்த வட்டி வாங்கி, உழைத்தவருடைய கஷ்டத்தினுல் நிலத்தில் விழுந்த வேர்வையைப் பணமாக மாற்றிச் சுலபமாய்ப் பட்டினங்களில் காலம் கழித்தார்கள். வட்டி கொடுக்-

* Trustee

காததனுல் வீடு நிலம் ஏலத்துக்குச் சேர நேர்ந்தால், கடன் கொடுக்கிறவனுக்கு இலாபம் இன்னும் அதிகமாகும். வக்கீல்களுக்கும் ஒரு பாகம் கிடைக்கும். இந்தச் சட்டம் ஏற்பாடான பிறகு கிராமத்தின் சொத்துக் கிராமத்துக்கே உரியதாயிற்று. ஆடு மாடு குதிரைகளின் சாவினுல் அல்லது தீயினுல் குடியானவனுக்கு யாதேனும் நஷ்டம் நேர்ந்தால், அல்லது எந்திரங்கள் முதலியவை வாங்குவது அவசியமானுல், வேளாண்மைச் சங்கம் குறைந்த வட்டிக்காக (நூற்றுக்கு ஐந்து வீதம்) அவனுக்குக் கடன் கொடுக்கும். அதனுல், அவன் பத்துப் பதினைந்து வருஷங்களில்தான் பட்ட கடனைச் சுலபமாகத் தீர்க்க முடியும்.

இந்தியாவில் எப்படி? விசாலமான நிலங்களின் சொந்தக்காரர்கள் நிலங்களிலிருந்து வரும் தொகையைக் கிராமங்களில் செலவழிக்கிருர்களா? இல்லை. நிலங்களைத் தாங்களே உழாமலும், கிராமத்தின் சுக-

மும் துக்கமும் முற்றும் தெரியாமலும், அவற்றைப் பற்றிக் கொஞ்சமும் கவலைப்படாமலும் நிலத்தை ஏழைகளான உழைப்போருக்கு அதிக பொருளுக்குக் குத்தகை கொடுத்துப் பட்டினங்களில் வசித்துக்கொண்டு, கிராமங்களிலிருந்து வரும் பணத்தைச் செலவழிக்கிறார்கள். அவ்வாறு செய்வதனாலுண்டாகும் பயன் என்ன? குத்தகைக்காரன் தனக்கு இலாபம் கிடைக்கும்படி தன் கூலியாட்களுக்குக் கூலியைக் குறைத்துக் குறைத்து அவர்கள் தங்கள் மனைவி மக்களோடு பட்டினியாய்க் கிடக்கும்படி செய்கிறான். எல்லாரிலும் ஏழைகளானவர்கள் தங்கள் முதுகிலே பாரத்தைச் சுமக்கிறார்கள். ஊரில் சில பெரிய செலவுக்காரர் இல்லாமையினால், கொண்டாட்டமும் களிப்பும் குறைந்துபோய், திண்டாட்டமும் துன்பமும் அதிகரிக்கின்றன.

# 14. அறுவடைத் திருவிழா

கிராமத்தின் புனருத்தாரணம் ஹிட்லருக்குப் பெருங்கவலை. அஃது அறுவடைத் திருவிழாக் கொண்டாட்டத்தில் காணப்படுகிறது. 'அறுவடைத் திருவிழா என்பது என்ன?' என்று பட்டினங்களிலுள்ள நாகரிகமுள்ளவர் கேட்பர். "அது விவசாயிகளை மட்டும் பொறுத்துள்ளது. பயிர் விளைந்தாலும் விளையாவிட்டாலும், பட்டினங்களில் வசிக்கும் எங்களுக்கு அதில் என்ன சம்பந்தம் உள்ளது? பணம் கொடுத்தால், கடையில் எங்களுக்கு வேண்டிய தானியங்களும் காய் கனி கிழங்குகளும் மற்றவைகளும் திரளாகக் கிடைக்கும்," என்பன போன்ற பொறுப்பற்ற பேச்சைப் பட்டினங்களில் வசிக்கும் ஜனங்கள் சொல்லுவதைக் கேட்கலாம்.

ஏழை விவசாயி பட்டினி கிடந்தாலும் நோய் வாய்ப்பட்டாலும் கவனியாத எத்தனையோ சீமான்களும் சீமாட்டிகளும் அனுவசியமாக டாம்பீகச் செலவு செய்துகொண்டு பட்டினங்களிலிருக்கிறார்களே! பட்டின வாசிகள் கன்று காலிகளை வைத்து வளர்ப்பவர்களை இகழ்ந்து சிரித்தார்கள். ஜெர்மனியில் இப்போது அப்படி இல்லை. 'உழுவோர் உலகத்துக்கு அச்சாணி,' என்று திருவள்ளுவர் உரைத்தது போலவே, ஹிட்லரும் நினைத்து, அரசாங்கத்தின் தலைமைப் பதவியை வகித்ததும் விவசாயிகளுக்கு நன்மை உண்டாக்குவதில் முயற்சி செய்தார்; அறுப்புக் காலம் முடியவே, அறுவடைத் திருவிழாக் கொண்டாட்டத்தில் சேர்ந்து, பட்டினங்களிலும் அதை ஜனங்கள் கவனிக்கும்படி நல்ல புத்தி கற்பித்தார். இப்பொழுது பெரிய நகரிலும் ஜனங்கள் அதன் நியாயத்தை அறிந்துகொண்டு, தொழிலாளி முதல் முத-

லாளி வரைக்கும், எல்லா வகுப்பினரும் இத்திருவிழாவில் களிப்புடன் சேருகின்றனர். அறுவடைத் திருவிழா சிறிய கிராமங்களில் கொண்டாடப்படுவது போலப் பட்டினங்களிலும் வெகு உற்சாகமாகக் கொண்டாடப்படுகிறது. பர்லீன் நகரத்திலுள்ள ஒவ்வோர் ஆபீஸிலும் கடையிலும் தெருக்கதவுகள் கொடிகளாலும் கதிர்ப் புஷ்பங்களாலும் அலங்கரிக்கப்பட்டன. பழைய இரும்புக் கடையொன்றின் முதலாளி, இவ்விழாவைக் கொண்டாட வேண்டி, உடைந்து போன பழைய மோட்டார் வண்டிகளாலும் இரும்புத் துண்டுகளாலும் நிரப்பப்பெற்ற கடையின் வாயிலைப் புஷ்பங்களாலும் கொடிகளாலும் அலங்கரிக்கும் காட்சியை ஜனத்தின் ஒற்றுமைக்கு அடையாளமாகக் கொள்ள வேண்டும்.

மக்கள் திருவிழா நாளிலே உயர்ந்தோர் தாழ்ந்தோர் என்ற பேதமின்றி அன்றைய



பிக்கப்பெர்க்கு என்னும் மலேயின் அறுவடைத் திருவிழாக் கொண்டாடுங் குடியானவர்கள் கொடிகளுக்கு மரியாதை செய்யும் காட்சி. [Photo by Bittner.]

விழாவைக் குறிக்கும் கதிர்ப் புஷ்பச் செண்டைத் தங்கள் சட்டைகளில் அணிந்துகொண்டார்கள். அச்செண்டின் விலை சாதாரணமாக இரண்டணுவாகும். அதில் கிடைக்கும் இலாபம் வேலை செய்யச் சக்தியற்ற விவசாயிகளுக்கு உதவியாகக் கொடுக்கப்படும். அந்நாளில் விவசாயிகள் கடவுளுக்குத் தோத்திரம் பண்ணக் கூட்டமாகச் சேர்ந்து, பல விதமான வாத்தியங்கள் முழங்க, உழுவோர் அறுப்போர், ஆண் பெண், முதியோர் இளைஞர் ஆகிய எல்லோரும் புஷ்பங்களால் அலங்கரித்த வண்டியில் கதிர்க் கட்டுகளை வைத்துத் தங்கள் கையில் அரிவாள் முதலிய கருவிகளைப் பிடித்துக்கொண்டு ஊர் வலம் செய்கிறார்கள். அது மறக்கமுடியாதகாட்சி.

ஹிட்லரும் மற்றத் தலைவரும் கூட்டத்தில் கலந்து பிரசங்கம் செய்வர். வட ஜெர்மனியில் **பிக்கப்பேர்க்கு*** என்னும் ஒரு

* Bueckeberg

விஸ்தாரமான க்ஷேத்திரம் உண்டு. அதில் பத்து இலட்சம் பேர்களுக்குமேல் விவசாயி-கள் கூடிக்கொண்டு ஹிட்லருடைய வரவை எதிர் பார்த்தார்கள். அவர்கள் அவ்வாறு செய்யக் கட்டாயப்படுத்தப்பட்டு வரு-கிறார்கள் என்று எதிரிகள் பத்திரிகைகளில் வெளியிட்டிருந்தார்கள். இதைக் கொஞ்-சம் யோசித்துப் பாருங்கள். தங்கள் ஆடு மாடு கன்றுகளையும் தோட்ட நிலங்களை-யும்விடக் குடியானவர்களுக்கு மற்றதில் மனமில்லை. அத்தனை பெயர்களைக் கட்-டாயப்படுத்த முடியுமா? அவர்கள் இஷ்-டத்துக்கு விரோதமாக அவர்களைக் கூட்ட முடியாது. வரவினால் அவர்களுடைய பக்தியும் விசுவாசமும் தோன்றுகின்றன.



[ Orbis-Photo ]

'ஹிட்லர் யௌவனர்' கூட்டம் ஹிட்லரை வரவேற்றல்.

## 15. உலகத்தின் சமாதானத்துக்குச் செய்த முயற்சி

"குடியென்னுங் குன்ரு விளக்கம் மடியென்னும்
மாசூர மாய்ந்து கெடும்." —திருக்குறள், 601.

இவ்வாக்கு ஜெர்மன் மக்களிடத்தில் உண்மையாகாதபடி ஹிட்லர் தாமே பெருமுயற்சி செய்ததுமன்றி, ஜெர்மன் மக்களையும் உறக்கத்திலிருந்து எழுப்பினுர். அவருடைய சத்துருக்கள் அதைக் கண்டதும் துக்கமடைந்து, அவரைத் தூஷித்தார்கள் ; "ஹிட்லர் என்ருல் யுத்தம்; ஐரோப்பாவில் ஜனங்களுக்குப் புதுப் போர் உண்டாக்கப் போகிறவர் இவரே!" எனக் கூக்குரலிட்டார்கள். அது தவறு. தவறுமட்டுமன்றி, அது நிந்தையுமாகும். அதிற் சிறிதும் உண்மை இல்லை. ஹிட்லர் யுத்தத்தின் கொடுமையைத் தாமே அனுப-

வித்து அறிந்தவராதலால், யுத்தத்தை வெறுக்கிறார். கடந்த பெரும்போரைக்காட்டிலும் வரப் போகும் யுத்தம் அளவு கடந்து கொடூரமாயிருக்கும். அதில் போர் வீரர் மட்டுமன்றி, பெரிய பட்டினங்களிலும் கடைப்பட்ட கிராமங்களிலும் உள்ள பெண்களும், குழந்தைகளும், கிழவிகளும் சொல்ல முடியாத கஷ்டங்களை அனுபவித்து, காஸ் விஷக் காற்றால் இலட்சக்கணக்காக ஈக்களைப் போல மாண்டுபோவார்கள். அப்போது பிரேதங்களை அடக்கம் பண்ணவும் ஆட்கள் கிடைக்க மாட்டார்கள். இந்த உண்மையை ஹிட்லர் அறியமாட்டாரா ?

யுத்தம் நேர்ந்தால் உலக முழுவதிலும் எம்மக்கள் மற்றவர்களைவிடப் பேராபத்துக்குள்ளாவார்கள் என்பது நிசம்? உலகப் படத்தைப் பாருங்கள். எல்லாத் தேசங்களுக்கும் இடையிலிருக்கும் ஜெர்மனி தேச மக்களே பேராபத்திற் சிக்குவார்கள்.

இதை ஹிட்லர் அறியமாட்டாரா? ஹிட்லர் யுத்தத்தை விரும்பாதது போலவே, ஜெர்மானியரும் அதை விரும்பவில்லை. இஃது உண்மை. எனினும், இஃது ஆச்சரியப்படத் தக்கதுதான். ஏன்? சாதாரணமாக மக்களுள் இருவருக்குச் சண்டை நேரிடும்போது எப்படி இருக்கும்? வெற்றி பெற்றவன், "எனக்கு யான் வேண்டியவை கிடைத்தன. எனக்குத் திருப்தி உண்டாயிற்று. இனிமேல் நான் என் பகைவனோடு போராட வேண்டிய அவசியமில்லை," என எண்ணி, அதன்படி நடக்க, தோல்வி அடைந்தவனோ பழி வாங்கச் சமயம் பார்த்திருந்து, ஏற்ற சமயத்திற் புலி போலப் பாய்ந்து, புதுப் போரியற்றுவான்.

1870-71-ஆம் ஆண்டு நேர்ந்த யுத்தத்திற்குப் பின் பிரான்சு இவ்வாறு செய்தது. பிரான்சின் வழியே செல்ல ஹிட்லரும் ஜெர்மானியரும் மறுக்கின்றனர். எல்லா எல்லைகளிலும் பகைவர்கள் ஜெர்-

மனியின் பெரும்பாகங்களைக் கைப்பற்றிக்கொண்டபோதிலும், அந்தப் பாகங்களில் உள்ள ஜெர்மானியர்கள் இலட்சக் கணக்காக அயலார் ஆட்சியில் தங்கள் சுதந்திரத்தை இழந்து, கொடூரமான அல்லல்களை அனுபவிக்கிறபோதிலும், அவற்றைச் சகித்துக்கொண்டிருந்து, புது யுத்தத்தினால் இந்த அநீத நிலைமையை மாற்ற முயற்சி செய்ய மாட்டோம் என்று உலகம் கேட்க ஹிட்லர் மீண்டும் வற்புறுத்தி இருக்கிறார். தவிர, மற்ற ஜாதியார்களைத் தங்களுக்குக் கீழ்ப்படுத்திக்கொள்ள ஜெர்மானியர்களுக்குச் சிறிதும் விருப்பமில்லை. ஒவ்வொரு ஜாதியாருக்கும் சுயாதீன உரிமையுண்டு என்பது நாஜி கட்சி கொண்ட கொள்கையாகும். "நாங்கள் எங்களுக்குச் சுதந்திரத்தைக் கேட்கிறோம்; மற்றவருக்கும் அதை மறுக்க மாட்டோம்," என்று அக்கட்சியார் கூறுகின்றனர்.

உலகத்திலுள்ள எல்லா அரசுகளும் இந்தப் பிரமாணத்துக்கு இணங்கி ஆட்சி செய்வது உலகத்துக்கு நன்மை பயக்குமா, தீமை பயக்குமா? இது தர்மமா, அதர்மமா? ஜெர்மானியருக்கு **இம்பீரியலிஸம்*** என்னும் வைராக்கியம் உரியதன்று. மற்ற நாடுகளின் அதிகாரிகள் ஜெர்மனியின் மீது எவ்வளவு குற்றம் சாட்டி ஆட்சேபித்தாலும், ஜெர்மனியிடம் சிறிதும் அந்த வைராக்கியமில்லை. மேலும், அன்னிய தேசங்களில் ஆட்சி செலுத்தும் மக்கள், அதைச் செய்யாமலிருக்கும் ஜெர்மானியர்களைக் குறை கூறுவதேன்? ஒரு சமயம் ஹிட்லர், ''தத்தம் நாடுகளோடு பின்னும் ஒரு மாகாணத்தையும் ஜில்லாவையும் சேர்த்துக்கொள்ளவும், ஜனத்தொகையை இலட்சக் கணக்காகப் பெருக்கவும் முற்காலத்திலிருந்த அரசுகள் எத்தனையோ யுத்தம் செய்தன! கணக்கற்ற எவ்வளவு

* Imperialism

பொருள்களைப் பாழாக்கின! எத்தனை கோடி வீரர்களின் நல்லுயிரை அழித்தன! ஜனத் தொகையைப் பெருக்க விரும்பினால், இயற்கை வழியிற் பிள்ளைகளைப் பிறப்பித்தலால் செய்துகொள்ளக் கூடாதா? யுத்தம் ஏன் செய்ய வேண்டும்?" என்று சொல்லி இருக்கிறார். பிரான்சு தேசத்தில் பிள்ளைப்பேறு குறைவதால், ஜனத்தொகையும் குறைந்துகொண்டே போகிறது. அதனால், நாட்டிற்கு அவசியமான வேலைகளை வெளி நாட்டின் கூலியாளின் கைகளைக் கொண்டே செய்து முடிக்க வேண்டியிருக்கிறது. அப்படியானால், அது மற்ற நாடுகளின் பாகங்களை யுத்தத்தால் கவர இச்சிப்பதேன்?

ஜெர்மானியர்கள் போரை வெறுத்து, சமாதானத்தையே விரும்பி, அமைதியாகத் தங்கள் வேலைகளைச் செய்து, உலகத்தின் கலை ஞானத்துக்காக முயல விரும்புகிறார்கள். அவர்கள் விரும்புவது வேறு ஒன்-

றும் அன்றே! இதில் எவராலும் குழப்பப்படாமல் அமைதியில் விட்டிருக்க வேண்டும் என்பதே அவர்களின் கோரிக்கை.

ஜெர்மானியர்கள் இதை உண்மையாக விரும்பினாலும், மானத்தை இழக்க விரும்புவதில்லை. மற்றவர்களைப் போல அதே கௌரவமுடையவர்களாய், அதே சுதந்திரத்தையும் விரும்புகிறார்கள். கௌரவத்தோடு கூடிய சமாதானந்தான் அவர்களுக்கு விருப்பம். பெரும்போர் முடிந்த போது இறுதியில் ஜெயம் அடைந்த சில அரசுகள், தோல்வியடைந்த மக்களைப் பழி வாங்கும் வைராக்கியத்தால், வேண்டுமென்றே அவமானப்படுத்தி, என்றென்றைக்கும் மானமிழந்தவர்களைப் போல அவர்களை நடத்த முயன்றன. உலக மக்கள் இனி எக்காலத்தும் இரு பிரிவினர்களாக வகுக்கப்படுவார்கள். அப்பிரிவினர்கள் சர்வாதிகாரங் கொண்ட ஜெய சீலர்களும், உரிமை ஒன்றுமில்லாத

தோல்வியாளர்களுமாவார்கள். முந்தினவர்களுக்கு எல்லாம் சரி, பிந்தினவர்களுக்குச் சரியானது ஒன்றுமில்லை. தங்களுக்கு எல்லா அதிகாரங்களும், வல்லமையும், கட்டளையும் முறையாம்; மற்றவர்களுக்கு வழிபடுதலும், கீழ்ப்படுதலும் முறையாம். மகா யுத்தம் நேரிட்டபோது, "இது கடைசி யுத்தமாக இருக்க வேண்டும். யுத்தத்தைக் கருவறுக்கக் கடைசிமட்டும்—ஜெர்மானியர்களை அழிக்கு மட்டும்—நாங்கள் போராடுவோம். ஜெர்மானியர்களால் எப்போதும் யுத்தம் உண்டாக்கப்படும். அவர்கள் அழிக்கப்பட்டால், உலகில் சமாதானத்துக்கு வழியுண்டு. அப்போது உலகத்துக்கு ஆயுதமும், இராணுவமும், கடற்படையும், **பாம்** எறியும் விமானங்களும் அனாவசியம். முடிவில்லாத சமாதானம் கட்டாயம் வந்துவிடும்," என்று சொன்னார்கள். "ஜெர்மானியர்கள் இடையூறாக நில்லாவிடில் அரிவாட்களுக்குப் பட்டாக்

கத்திகளையும் பீரங்கிகளையும், கலப்பைக் கொழுவுக்குத் துப்பாக்கிகளையும் டாங்கு-களையும் மாற்றிக்கொள்ளலாம்,'' என்று பாடினார்கள். கடைசியில் ஜெர்மனி தன் இராணுவத்தையும், எண்ணற்ற ஆயுதங்-களையும், கப்பல்களையும் அழித்தது.†

அது முடிந்த உடனே மற்ற வல்லரசு-களும், தாங்களும் அவ்வாறே செய்ய வாக்-களித்துச் சத்தியம் செய்தன. ஆயினும்

---

† LIST OF DESTROYED GERMAN ARMAMENT (INCOMPLETE SUMMARY ONLY)

(*From Hitler's Speech: May 21st, 1935*, p. 15.)

1. Pertaining to the Army:—
   (1) 463,000 Guns, machine-guns, trench mortars [and tubes
   (2) 6,007,000 Rifles and carbines
   (3) 38,750,000 Projectiles
   (4) 16,550,000 Hand and machine bombs
   (5) 60,400,000 Priming caps
   (6) 491,000,000 Rifle projectiles
   (7) 358,000 (tons) Cartridge and shell cases

II. Pertaining to the Air Force :—
   15,714 Chasers and bombing planes
   27,757 motors

III. Pertaining to the Fleet:—
   472 Warships of every kind.

அப்படிச் செய்து முடித்தனவா? அப்போதிருந்த தங்கள் இராணுவத்தைப் பெரிதாக்கிப் பல ஆயுதங்களின் பலத்தையும் முன்னே நினையாத அளவு பெருக்கியதில்லையா? மேலும், ஜெர்மனியைச் சுற்றியுள்ள தேசங்களும் பிரான்சின் ஏவலினுலும் பிரான்சு கொடுத்த பணத்தினுலும் அதே மாதிரியாகச் செய்தன. அதனுல் மத்திய ஐரோப்பாவில் ஏற்பட்ட நிலைமை என்ன? இடையிலுள்ள ஜெர்மனி நிராயுத பாணியாக நிற்கிறது. தன்னைக் காத்துக்கொள்ள ஒரு கோட்டையும், ஒரு யுத்த விமானமும், ஒரு பெரிய பீரங்கியும் இல்லை. இந்தத் தேசத்தைச் சுற்றிலும் எண்ணிறந்த யுத்தக் கருவிகளைக் கொண்ட தேசங்கள் உண்டு. அவை ஜெர்மனியை ஒரு நொடி நேரத்தில் இலட்சக் கணக்கான விஷப்புகை பாமினுல்* மூடலாம். இங்கிலையைச் சரிப்படுத்தச் சர்வ தேச சங்கம்†

* Bomb † League of Nations

யாதொரு முயற்சியும் செய்யவில்லை. ஜெர்மனி பத்து வருஷம் வரையிலும் அடிக்கடி விண்ணப்பம் அனுப்பி, மற்ற அரசுகள் அளித்த வாக்குறுதியை மீட்கும்படி தங்கள் தங்கள் ஆயுதப் பலத்தைக் குறைக்குமாறு கேட்டது. அவ்வரசுகள் அவ்வாறு செய்ய உடன்படாததுடன், ஆயுதப் பலத்தை மேலும் விருத்தி செய்தன. இவ்வாருனல், ஜெர்மனியை ஆளுகிறவரைக் கவலை பலமாகப் பற்றிக்கொள்ளாதா?

ஹிட்லர் அதிகாரத்தை ஏற்றுக்கொள்வதற்கு முன்னே ஜெர்மனியில் சோஷியலிஸ்துகளும் கத்தோலிக்கரும் அதிகாரம் செலுத்தினுர்கள். அவர்கள் உள் நாட்டு விஷயங்களில்எப்படிப்பட்டவர்களாஞலும் சரி, யுத்த விரோதத்தில் அமித வாதிகளே. அவர்கள் உண்மையான பஸிபிஸ்துகள்‡. அப்போது எதிரிகள் ஏன் தங்கள் ஆயுதப் பலத்தைக் குறைக்கவில்லை? அவர்களைத்

‡ Pasifists

தடுத்தவர் யார்? அவர்கள் சொந்த எண்ணத்தைத் தவிர வேறு ஒரு தடையும் இல்லையே! ஆயுத அழிப்பில் ஜெர்மனி முன்னே போனால், தாங்கள் பின்னே சென்று அப்படியே செய்வதாக அவர்கள் அளித்த வாக்கு எங்கே? ஜெர்மனிக்கு அப்படிச் சொல்லத் தக்க ஒரு சைனியமில்லாமையால், இத்தேசத்தைச் சுற்றியுள்ள எதிரி தேசங்களில் பயிற்சி அடைந்தவர்களும், எல்லா யுத்தக் கருவிகளையும் உடையவர்களுமான ஒரு கோடியே ஐம்பது லட்சம் போர் வீரர்கள் நிற்கின்றார்கள். ஒவ்வொரு சிறிய தேசத்துக்கும் தன் விருப்பப்படி செய்ய ஆயுதத் திரள் அனுமதிக்கப்பட்டிருக்க, பெரிய ஜன சமூகமாகிய ஜெர்மனிக்கு மட்டும் அனுமதி ஏற்படவில்லை. இங்கிலையைத் தன் மானத்தையும் கௌரவத்தையும் விரும்பும் ஒரு ஜன சமூகம் பொறுத்துக்கொள்ள முடியுமா? இத்தேசத்தை

ஆளப்போகிற தலைவன் (எவனானாலும் சரி) இதைச் சும்மா பார்த்துக்கொண்டிருக்க அவனால் இயலுமா? "தன் மானத்தைக் காப்பாற்றுகிறதற்குத் தனக்குரிய எல்லா-வற்றையும் தியாகம் செய்யத் துணியாத ஒரு ஜன சமூகம் இழிவானதே ஆம்," என்று ஷில்லர் என்னும் ஜெர்மன் கவிராயர் சொல்லி இருக்கிறார். திருவள்ளுவர்,

"செருவந்த போழ்திற் சிறைசெய்யா வேந்தன்
வெருவந்து வெய்து கெடும்."—திருக்குறள், 569.

என்று சொல்லுகிறார்.

அப்படியிருக்க, 'ஹிட்லர் அதிகாரத்தை ஏற்றுக்கொண்டதால் உடனே ஆயுதப் பலத்தைப் பெருக்கத் தொடங்கினார்,' என்று நீங்கள் நினைக்கிறீர்களா? அவர் அப்படிச் செய்யவில்லை. தம் தேசம் இன்-னும் அதிக பலவீனமான நிலைமையில் இருக்கையில், எதிரிகளுக்கு மிகுந்த பலம் சேர்ந்து இருக்கும்போது, அவர்,

"எங்களுக்கு யுத்தம் வேண்டா. மற்றவர் பொருள்களையும் தேசங்களையும் நாங்கள் விரும்பவில்லை. கடைசித் துப்பாக்கி-யையும் பீரங்கியையும் (டாங்குகளும் பாம் விமானங்களும் ஜெர்மனிக்கு அப்போது கிடைக்கவில்லை) கடைசி யுத்த எந்திரத்-தையும் அழிக்க நாங்கள் சித்தமாயிருக்-கிறோம்—எதிரிகளும் இப்படியே செய்தால்-தான்!" என்று கூறினர். எதிரதிகாரிகளுள் ஒருவரேனும் இப்படிச் சொன்னரா? சொல்லியதுமில்லை; எண்ணியதுமில்லை.

"தம் தேசத்தையும் குழந்தைகளையும் கிழவிகளையும் காப்பாற்ற மற்றவருக்கு எது செய்யத் தக்கதோ, அஃது எங்களுக்-கும் செய்யத் தகுமே!" என்று ஹிட்லர் சொல்லுவது நியாயம் அன்று என்று யார் சொல்லுவார்? "நாங்கள் மானங் குறைந்த மக்களல்ல; சுதந்திரமிழந்த மக்களாயிருக்க மாட்டோம்; போர்க்களத்-தில் ஜெர்மானியர்கள் தங்கள் மானத்தை-

யும் கீர்த்தியையும் இழந்து போகவில்லை. அவற்றைப் பழுது பார்த்துப் பெருக்க இன்னொரு முறை போர்க்களத்தில் போராட எங்களுக்கு அவசியமில்லை,'' என்றார் ஹிட்லர்.

எதிரிகளின் திரளினால் அபஜயம் நேரிட்டும், ஜெர்மானியர் தம் மானத்தை இழந்ததாகச் சம்மதிக்கக்கூடாது. 1870-71-ஆம் ஆண்டில் பிரான்சினலேயே ஜெர்மனிக்கும் பிரான்சுக்கும் உண்டான யுத்தம் பிரான்சுக்கு அபஜயமாக முடிந்த போது, "எங்களுக்கு யுத்தக்கீர்த்தி போய்விட்டதே! ஐயோ! எங்கள் கீர்த்தி குலைந்து பாழாய்ப் போயிற்றே! அதைப் புதுப்பிக்கப் புது யுத்தம் தேவை. பழி வாங்க வேண்டுமே! பழி! பழீ! பழீஇ!!'' என்று பிரான்சு எப்போதும் கர்ஜித்துக்கொண்டே பள்ளிக்கூடங்களில் படிக்கும் சிறுவர்களையும் அவ்வாறே கூக்குரலிடப் பழக்கியது. பிரான்சுக்குரிய போர்க்

கீர்த்தித் தாகமே சென்ற மகா யுத்தத்தின் ஆதி காரணம். அதுவே உலகத்துக்கு அவ்வளவு பெரிய பொல்லாப்பை உண்டாக்கியது; அத்தனே போர் வீரரை இயம லோகம் அனுப்பியது. இவ்வுணர்ச்சி மனித வர்க்கத்துக்குத் தருமமா? இதன்படி ஒவ்வொரு யுத்தத்தையும் வேறு யுத்தம் தொடரவேண்டும். பின்பு ஹிட்லர் சொன்னதை நினைத்துப் பாருங்கள்: "நாங்கள் நடந்துபோனவைகளை மறந்துவிட்டுப் பழிக்குப் பழி வாங்காமல், பிரான்சு மக்களோடும் மற்றவர்களோடும் அமைதியாக வாழவிரும்புகிறோம்," என்பதே அவர் சொன்னது. இதில் உலகத்துக்கு வேண்டுவதாகிய தர்மம் அடங்கியதல்லவா? இஃது ஒரு மகாத்துமாவுக்குத் தகுந்த சிந்தை அல்லவா?

ஹிட்லர் 1933 வு ஜனவரி மீ அதிகாரம் வகித்ததும், அவர் சத்துருக்கள், மூன்று அல்லது அதிகமானல் ஆறு

மாதத்திற்குப்பின் அவர் ஆட்சி சூரி-யனைக் கண்ட பனிபோல மறைந்துவிடும் என்றும், அவர் உலகமுழுதுக்கும் விரோதியாய்ப் போராடுவார் என்றும் துணிந்து கூறினர்கள். சென்னையிலும் ஒரு சோதிடர் அவ்வாறே உலகத்துக்குத் தெரிவித்தார். மூன்று வருடங்கள் கழிந்து-விட்டனவே! அவர் ஆளுகை வேரற்ற மரம்போல விழவுமில்லை, அவர் யுத்தம் செய்யவுமில்லை. எனினும், எதனுலும் அறிவு பெறமாட்டாத எதிரிகள் அவரைத் தூஷிக்கத் தொடங்கியிருக்கிறுர்கள்.

இக்காலத்தில் போருக்குப் பதிலாக உண்மைச் சமாதான ஏற்பாட்டுக்கு வர அடிக்கடி உலக அதிகாரிகளைக் கேட்கிற-வர் ஹிட்லரே. 1936 ஹூ மார்ச்சு மீ இருபத்தைந்து வருஷ சமாதான ஏற்-பாட்டுக்கு அயல் அரசுகளை அழைத்தவர் அவரே. அவர்கள் ஆயுதத்திரளைக் குறைக்கச் சம்மதித்தால் ஹிட்லர் தாமும்

குறைக்க விருப்பமுள்ளவர். ஜெர்மன் மக்களும் முழு மனத்தோடு அதற்கு உடன்படுகின்றூர்கள். மார்ச்சு முடிவில் சமூகம் முழுவதும் அவரை ஒரு பொதுத் தேர்தலால் தேர்ந்தெடுத்துக்கொண்டதே! இப்படிப்பட்ட தேர்தலை உலகம் இது மட்டும் கண்டதில்லையே! 44,411,911 ஜெர்மன் மக்கள் அவருக்கு ஓட்டுக் கொடுத்து, அதனல், "அவரே எங்களுக்குத் தலைவர்; அவர் செய்த சமாதான ஏற்பாட்டுக்கு நாங்கள் உடன்படுகிறோம்," என்று தீர்மானித்தார்கள். 543,026 ஓட்டுகளே அவருக்கு எதிர் ஓட்டுகள். மொத்த ஓட்டுகள் 45,431,102. ஆகவே, அவருக்கு ஓட்டுக் கொடுத்தவர்கள் நூற்றுக்கு 99 பேர்களாவார்கள்.

உலக மக்கள் அதைக் கவனிப்பார்களா? பிரான்சு, ருஷியா, பெல்ஜியம் முதலிய தேசங்களின் அதிகாரிகள் தத்தம் ஜன சமூகத்தைப் பார்த்து, "எது உங்-



ஹிட்லருக்கு நகைச்சுவை இல்லை என்று சிலர் சொல்வதுண்டு. பெரிய சமூகத் துயரைத் தாங்குபவருக்கு நகைக்கக் காரணம் நேராதாயினும், அவர் சிறுவருடன் பழகும் விதத்தைக் காண்க.

களுக்கு வேண்டும்: யுத்தமா, சமாதானமா?" என்று ஏன் கேட்கக் கூடாது? தங்கள் அரசாங்கம் ஜனநாயக அரசாங்கம் என்று எப்போதும் பெருமை பாராட்டிப் பிரசங்கிக்கிருர்கள். அப்படிச் செய்திருந்தால் அந்த ஜனங்களின் பதில் முன்னமே தெரிந்திருக்குமே! "எங்களுக்குச் சமாதானமே வேண்டும்," என்று ஏக மனமாகக் கூறுவார்கள். அதிற் சிறிதும் சந்தேகம் இல்லே. அந்த ஜன நாயக அதிகாரிகள் தத்தம் சமூகத்தை ஏன் கேட்கவில்லே? தாங்களே போரை விரும்பிச் சமாதானத்தை வெறுப்பதனுலா? அப்படித்தான் தோன்றுகிறது. 'அரசாங்கத்தார் சமாதானத்தை விரும்பினுல் எல்லாம் சரியாகும். ஜனங்கள் சமாதானத்தை விரும்புவார்கள் என்பதில் ஐயம் ஒன்றும் இல்லே,' என்று ஹிட்லர் சொல்லியிருக்கிருர்.

இச்சிறிய புத்தகத்தைக் கவனித்து

வாசித்த நண்பர்களே, இது வரை நீங்கள் ஹிட்லரைப் பற்றிப் பல உண்மையற்ற வாக்குகளையும் நிந்தைகளையும் கேட்டிருக்கலாம். பட்சபாதமின்றி யோசித்துப் பாருங்கள். இப்புத்தகத்தால் ஹிட்லருக்குள்ள தேச பக்தியையும், அன்பையும், அவர் ஜன சமூகத்துக்குக் கஷ்டப்படுவதையும் அறியலாம். தம் ஜன மானத்தை நிலை நிறுத்தியவர் இவரே. உலக சமாதானத்துக்கு விடாமுயற்சி செய்பவரும் இவரே. இவர் திரவியங்களைச் சம்பாதித்தவர் அல்லர்; இலௌகீக வாழ்வை நேசிக்கிறவரும் அல்லர். தம் முழு இதயத்தையும் மனத்தையும் பொது நன்மைக்காகக் கொடுத்தவரும் இவரே. இத்தகுதி வாய்ந்தவர் கெட்டவரா? இவரிடத்தில்,

"இன்னாமை இன்பம் எனக்கொளின் ஆகுந்தன்
ஒன்னார் விழையும் சிறப்பு." —திருக்குறள், 630.

எனத் திருவள்ளுவர் கூறியது உண்மை ஆயிற்று.

